ஸ்ரீ:

# ஸ்ரீராமாநுஜன் 17

ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாய தத்துவங்களை யுணர்த்த
மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை.

[மதராஸ் ஸத்க்ரந்த ப்ரகாசந ஸபையின் வெளியீடு]

ஆசிரியர்: ஸ்ரீகாஞ்சீ. பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர்.

**10—2—1950 விரோதிஸூ தைமீ**

## எம்பெருமானாரும் கூரத்தாழ்வானும்.

ஸ்வாமியெம்பெருமானார் திருவடிகளிலே ஆச்ரயித்து ஸத்தை பெற்ற முதலிகளுக்குள் கூரத்தாழ்வானுக்குள்ள ஏற்றம் ஒப்பற்றதாகும். அதைப்பற்றிப் பிறகு விரிவாகப்பேசுவோம். ஆழ்வான் எம்பெருமானார்திறத்து ஈடுபட்டவகையைப் பற்றி முன்னம் பேசுவோம். ஸ்வாமியைப்பற்றி ஸ்துதியாக ச்லோகங்கள் இயற்றியவர்கள் பல்லாயிரவர் இருந்தாலும் கூரத்தாழ்வானருளிச் செய்த * யோநித்யமச்யுத * இத்யாதியான திவ்ய ச்லோகமே ஸ்வாமியின் தனியனாக உலகமெங்கும் குலாவப்படுகின்றது. ஆழ்வானருளிச் செய்த பஞ்சஸ்தவங்களுள் முதலதான ஸ்ரீவைகுண்டஸ்தவத்தின் முதல் ச்லோகமாக அமைந்தது இந்த ச்லோகம். இதிலுள்ள சொற்பொருளழகைச் சிறிது அநுபவிப்போமிங்கு.

* த்ருணீக்ருதவிரிஞ்சாதிநிரங்குசவிபூதய:, ராமாநுஜபதாம்போஜ ஸமாச்ரயணசாலிந: * என்று, எம்பெருமானாருடைய திருவடிஸம்பந்தம் பெற்றவர்களெல்லாரும் விரிஞ்சாதிநிரங்குச விபூதிகளையும் த்ருணீகரித்திருப்பர்கள் என்று சொல்லப்படாநின்றது. அவர்களே அப்படியிருக்கும்போது ஸ்வாமியின் வைராக்யம் வாசாமகோசரமாக இருக்கவேண்டும். மஹாவிரக்தாக்ரேஸராக ஸ்வாமியைப் புகழவேண்டியிருக்க, "ஸ்வர்ணத்தில் மஹத்தான மோஹமுள்ளவர் ஸ்வாமி" என்று கூறப்படுகிறது இந்த ச்லோகத்தில். உத்தமாச்ரமிகளில் உத்தமரான ஸ்வாமி ஸ்வர்ணத்தைக் காஷ்டலோஷ்டஸமமாக நினைத்திருக்கவேண்டியவர்; அப்படியே நினைத்திருந்தவர். அப்படிப்பட்ட ஸ்வாமியை ஸ்வர்ணத்தில் வியாமோஹங் கொண்டவராகக் கூறலாமோ?

எந்த ஸ்வர்ணத்தில் வ்யாமோஹங்கொண்டவராகக் கூறப்பட்டார்? என்பதை ஆராய்ந்தால் ஸ்வாமியின் வைராக்யாதிசயமே விசதமாகும். [அச்யுத பதாம்புஜயுக்மருக்ம வ்யாமோஹத:] எம்பெருமானுடைய திருவடித்தாமரைகளையே ஸ்வர்ணமாகச் சொல்லி, அதில் வ்யாமோஹங்கொண்டவராகச் சொல்லப்பட்டுள்ளது. * உன் பொற்றாமரையடியே

போற்றும் * என்று ஆண்டாளும், * உலகமளந்த பொன்னடியே அடைந்துய்ந்தேன் * * தாமரையன்ன பொன்னாடி * என்று திருமங்கையாழ்வாரும் மற்றும் பலரும் எம்பெருமானது திருவடியைப் பொன்னடியாகப் பேசியிருப்பதை அடியொற்றி ஆழ்வானும் " பதாம்புஜயுக்ம ருக்ம " என்றார். எம்பெருமானது திருவடிகளை ஸ்வர்ணமென்று சொல்லுவதில் பலவகையான பொருத்தங்களுண்டு ; சில பொருத்தங்களை இங்கு நிரூபிப்போம்.

1. உலகில் ஸ்வர்ணத்துக்கு இரண்டுவிதமான தன்மைகள் காணப்படுகின்றன ; அதை விற்பனை செய்து வேறு பல பொருள்களை வாங்குகிறோம் ; அப்படி விற்பனை செய்யாமல் அதையே பரம போக்யமாகக்கொண்டு பூஷணமாக்கிப் பூண்கிறோம். இவ்விரண்டு தன்மைகளும் உபாயத்வம் உபேயத்வம் எனப்படும். வேறு பொருள்களை வாங்குகைக்கு உறுப்பாயிருத்தல் உபாயத்வமாகும். தானே போக்யமாகப் பூணப்படுதல் உபேயத்வமாகும். இவ்விரண்டு தன்மைகளும் எம்பெருமானுடைய திருவடிகளுக்குமுண்டு. அத்திருவடிகளை யிறைஞ்சியேத்தும் முகமாக ஐச்வர்ய ஸந்தான ஸ்வர்க்காதி புருஷார்த்தங்களைப் பெறுவார்க்கு அவை உபாயகோடியில் நிற்கின்றன. அப்படி ஒன்றையும் விரும்பாமல் * எம்மாவீட்டுத்திறமும் செப்பம் * என்று சொல்லிப் பரமபதத்தையும் புறக்கணித்து அவையே ஸ்வயம் போக்யம் என்றிருப்பார்க்கு அவை உபேய கோடியில் நிற்கின்றன. உபேயம், ப்ராப்யம், ஸாத்யம் என்பன பர்யாயபதங்கள். பலன் என்றபடி.

உபாயத்வமும் உபேயத்வமும் பரஸ்பர விருத்த தர்மங்களாகையாலே இவை ஒரே ஆச்ரயத்தைப்பற்றி நிற்குமோ வென்று சிலர் சங்கிப்பதுண்டு. கீழே நாம் ஸ்வர்ணத்தினிடத்திலே இவ்விரண்டையும் ஸமந்வயப்படுத்திக் காட்டினோமாதலால் இந்த சங்கையுதிக்க நியாயமில்லை. ஸ்வர்ணமென்பது தொன்றேயன்று ; எப்பொருளையும் எடுத்துக் கொள்ளலாம். ஒருவன் தோட்டம் வைத்து வாழை பலா மா முதலியவற்றைப் பயிர் செய்கிறான் ; அவற்றின் பழங்களை விற்பனை செய்து காசாக்கினால் அவற்றுக்கு உபாயத்வமென்ற தன்மை தேறுகிறது ; விற்பனை செய்யவிரும்பாமல் அவற்றைத் தானே அருந்தினால் அப்போது அவற்றுக்கு உபேயத்வமென்கிற தன்மை தேறுகிறது. இப்படி எப்பொருளிலுங்காணலாம். ஒரு வஸ்துவுக்கு ஒரு வ்யக்தியைக்குறித்து ஒரே காலத்தில் உபாயத்வ உபேயத்வங்கள் ஸமந்விதமாகமாட்டாதே யொழிய அதிகாரிபேதேநவும் காலபேதேநவும் அவை ஏகாச்ரயத்தில் ஸமந்விதமாகக் குறையில்லையே. ஆக, இத்தன்மையொற்றுமையினாலே எம்பெருமான் திருவடிகள் ஸ்வர்ணமென்னத்தகும்.

2. ஸ்வர்ணமானது தன்னைப் பெற்றவர்களையும் பெற விருப்பமுடையாரையும் இரவும் பகலும் கண்ணுறங்கவொட்டாது. பெறவிருப்பமுடையவர்கள் மேன்மேலும் ஆர்ஜனத்திலே கருத்தூன்றி அதிலேயே கவலையாகக் கண்ணுறங்கார்கள். பெற்றவர்கள், இதற்கு யாராலே என்ன அபாயம் வந்திடுமோ வென்கிற அச்சத்தினால் கண்ணுறங்கார்கள். எம்பெருமான் திருவடியைப் பெற்றவர்களும் *தத் விஷ்ணோ: பரமம் பதம் ஸதா பச்யந்தி ஸூரய: * என்கிறபடியே கண்ணுறங்கார்கள் ; அவ்வளவேயுமன்றிக்கே * உறகலுறகலுறகல் ஒண்சுடராழியே சங்கே ! அறவெறி நாந்தகவாளே அழகிய சார்ங்கமே தண்டே ! இறவுபடாமலிருந்த எண்மருலோகபாலீர்காள் ! பறவையரையாவுறகல் பள்ளியறை குறிக்கொண்மின் * என்று, உறங்கவேண்டா உறங்கவேண்டாவென்று கூப்பிடுவதுஞ் செய்வர்கள். பெறநினைப்பவர்கள் * கண்ணாரக் கண்டு கழிவதோர் காதலுற்றார்க்கு முண்டோ கண்கள் துஞ்சுதலே * என்கிறபடியே கண்ணுறங்ககில்லார்.

3. ஸ்வர்ணமானது தன்னையிழந்தவனைக் கதறிக்கதறியழப்பண்ணும்; எம்பெருமான் திருவடியை யிழந்தவர்களும் "இழந்தேனிழந்தேனே" என்றும் "இன்பத்தை யிழந்த பாவியேனெனதாவி நில்லாதே" என்றும் சொல்லிச் சொல்லிக் கதறியழுவர்கள். * அரசமர்ந்தானடிசூடுமரசையல்லால் அரசாகவெண்ணேன் மறறரசுதானே * என்னும் படியான அத்யவஸாயமுடைய பராழ்வான் ஸபையிற்புரண்டு கதறியழுதமை ஸ்ரீ ராமாயணப்ரஸித்தம்.

4. ஸ்வர்ணமானது தன்னையுடையவனை மார்புநெறிக்கப்பண்ணும் ; மஹாதனிக னென்கிற செருக்கை விளைவிக்குமன்றோ. துயரறுசுடரடி தொழப் பெற்றவர்களும் * எனக்காரும் நிகரில்லையே * மாறுளதோவிம்மண்ணின்மிசையே * எனக்கார் பிறர் நாயகரே * எனக்கென்னினிவேண்டுவதே * யாவர் நிகரகல்வானத்தே * இனியென்ன குறை யெழுமையுமே * என்று பலவாறு சொல்லிச் செருக்குறுவர்கள்.

5. * ஹெறூ: வெஹொ நஷாஹெ ந ஹெஹெ ந கஷணெ நவா। ஸதெவ உஹறூ-:வெம் யகூ-ஂஜாஸஉெதாஸ நஶ—ஹேம்ந: சேதோ ந தாஹேந சேதேந கஷணேநவா, ஏததேவ மஹத் துக்கம் யத் குஞ்ஜாஸமதோலநம் * என்றான் ஒரு மஹாகவி. பொன்னைத் தீயிலிட்டுச் சுடுகிறோம், உளியையிட்டு வெட்டுகிறோம், உரைகல்லிலேயிட்டுக் கனக்கவுரைக்கிறோம். இன்னமெத்தனை ஹிம்ஸைகள் செய்யினும் அவற்றால் பொன்னானது சிறிதும் வருந்தமாட்டாது ; வருத்தமில்லை யென்பது மாத்திரமேயன்று, அந்த ஹிம்ஸைகளெல்லாம் தனக்குப் பரம போக்யமேயென்பது தோன்ற ஒளியை மிகுத்துங்காட்டும். பொன்னைத் தீயிலிட்டுச் சுடும்போதும் உளியிட்டுவெட்டும்போதும் உரைகல்லிலுரைக்கும்போதும் அதற்கு ஒளி ...றுதலைக்காண்கிறோமன்றோ. ஆகவே தஹநச் சேதந கஷணங்களினால் பொன்னுக்கு ...த்தமில்லை. வேறொரு காரியத்தினால் வருத்தம் சாலவுமுண்டு அதற்கு. அஃது என் ...ன்னில் ; [யத் குஞ்ஜாஸமதோலநம்] குஞ்ஜா என்று குன்றுமணிக்குப் பெயர். மிக ...பமான தொரு குன்றுமணியோடொக்க நம்மை நிறுப்பதே! என்று இதுதான் ...பான்னுக்கு வருத்தமாம். ஒரு திராசில் குன்றுமணியையும் மற்றொரு திராசில் ஸ்வர்ணத் ...தயும் வைத்து நிறுக்கக் காண்கிறோமன்றோ. 'பொன் என்று போற்றப்படுகின்ற ...மக்குக் கடைகெட்ட குன்றுமணிதானோ ஈடாகவேணும்' என்று வருத்தமாமதற்கு. அதுபோல, *மலர்மகள் விரும்பும் நமரும் பெறலடிகளுக்கு தூதனுப்பப்பெறுகை தாம்பா லாப்புண்கை முதலானவற்றால் சிறிதும் வருத்தமில்லை ; வருத்தமின்மை மாத்திரமன்று, அவற்றால் மிக்கமுகமலர்த்தியுமுண்டு. * தூது ஆதிமன்னர்க்காகிப் பெருநிலத்தார் இன்னார் தூதனென நின்றான் * என்றும் * வெண்ணெய்க் கன்றாய்ச்சி வன்தாம்புகளால் புடைக்க ...லர்ந்தானை * என்றுமுள்ள பாசுரங்கள் காண்க. ஆகவே தூதுபோகவிடுதல் தாம்பால் ...ட்டியடித்தல் முதலானவற்றால் எம்பெருமானுக்கு வருத்தமில்லை, மகிழ்ச்சியே யென்பது ...ங்கிற்று. பின்னை எதனால் வருத்தமுண்டாமென்னில் ; ஸ்வர்ணத்துக்குத் தன்னைக் ...ன்றுமணியோடொக்க நிறுத்தல் எப்படி துக்கஹேதுவோ அப்படியே * ஒத்தாரும் ...க்காருமில்லாத எம்பெருமானுக்கும் அதிக்ஷுத்ரவஸ்துக்களான சிலவற்றோடே தன்னை யொப்பிடப்பெறுதலே துக்கஹேதுவாமென்பது * சுட்டுரைத்த நன்பொன் உன் திருமேனி யொளி யொவ்வாது, ஒட்டுரைத்திவ்வுலகுன்னைப் புகழ் வெல்லாம் பெரும்பாலும் பட்டுரை ...ாய்ப் புற்கென்றே காட்டுமால் பரஞ்சோதீ * என்பது முதலான பாசுரங்களினாலுணரத் ...க்கது. [திருவடியை ஸ்வர்ணமென்றது எம்பெருமானையே ஸ்வர்ணமாகச் சொன்னபடி ...ாம். * பொன்னாய் * என்றும் * பொன்னைமாமணியை * என்றும் * பொருது வரு கின்ற பொன்னே * என்றுமுள்ள பாசுரங்கள் காண்க.]

ஸ்வாமி யெம்பெருமானார்க்கு எந்த எம்பெருமானுடைய பதாம்புஜயுக்ம ருக்மத்தில் வியாமோஹமென்னில், [அச்யுதபதாம்புஜ] என்கிறார். அச்யுதனென்று எம்பெருமானுக்குப் பொதுவான திருநாமமா யிருந்தாலும், திருக்கச்சிநம்பிகள் தேவப்பெருமாளை நோக்கி * நமஸ்தே ஹஸ்திசைலேச !.... ப்ரணதார்த்திஹர ! அச்யுத ! * என்றருளிச் செய்திருக்கையாலே தேவப்பெருமாளையே இங்கு அச்யுத சப்தார்த்தமாகக் கொள்ளலாம்; * தென்னத்தியூரர் கழலிணைக்கீழ்ப் பூண்டஅன்பாளனிராமானுசன் * என்ற நூற்றந்தாதிக்குச் சேருமிது. அன்றியே, திருமாலையில் * பச்சைமாமலைபோல்மேனிப்பா சுரத்தில் "அச்சுதா அமரரேறே!....அரங்கமாநகருளானே" என்றருளிச் செய்திருக்கையாலே தென்திருவரங்கம் கோயில் கொண்ட பெருமாளையும் இங்கு அச்யுத சப்தார்த்தமாகக் கொள்ளலாம். * பொன்னரங்க மென்னில் மயலே பெருகுமிராமானுசன் * என்ற நூற்றந்தாதிக்கு இணங்குமிது. ஆக, தென்னத்தி யூரருடையவும் தென்னரங்கருடையவும் திருவடித்தாமரைகளாகிற ஸ்வர்ணத்திலே மயல் கொண்டு மற்றதை யெல்லாம் த்ருணமா நினைத்தவர் எம்பெருமானார் என்றதாயிற்று. ஆகவே எம்பெருமானார்க்கு ஸ்வர்ணத்தில் வ்யாமோஹ முள்ளதாகச் சொன்னவிது அவருடைய வைராக்யாதிசயத்தையே நன்கு விளக்கினபடி யாயிற்று.

இந்தத் தனியனில் அஸ்மத்குரோ:, பகவத:, தயைகஸிந்தோ: என்று மூன்று விசேஷணங்கள் ஸ்வாமிக்கு இடப்பட்டுள்ளன. அவற்றையும் விவரிப்போம். [அஸ்மத்குரோ:] * குசப்தஸ் த்வந்தகாரஸ் ஸ்யாத் ருசப்தஸ் தந்நிரோதக:, அந்தகாரநிரோதித்வாத் குருரித்யபிதீயதே * என்கிறபடியே அஜ்ஞாநவிருளைப்போக்குமவர்க்கே குருசப்தவாச்யத்வமுள்ளது, * கடலளவாய திசையெட்டினுள்ளும் கலியிருளே மிடைதருகாலத்திராமானுசன் மிக்கநான்மறையின் சுடரொளியால் அவ்விருளைத் துரந்திலனேல் உயிரையுடையவன் நாரணனென்று அறிவாரில்லையுற்றுணர்ந்தே * என்று நூற்றந்தாதியில் அமுதனார் பணித்தபடியே கலியிருளை யொழிப்பதற்கென்றே திருவவதரித்த எம்பெருமானார்க்கே குருசப்தவாச்யத்வ பூர்த்தி யுள்ளது. * தஸ்மிந் ராமாநுஜார்யே குருரிதி பதம் பாதி நாந்யத்ர * என்று அக்கரத்திலேயே நிஷ்கர்ஷித்த விஷயமிது. * புண்யாம்போஜ விகாஸாய பாபத்வாந்த க்ஷயாய ஸ்ரீமாந் ஆவிர்பூத் பூமௌ ராமாநுஜதிவாகர: * என்று அபிநவஸூர்யராக ப்ரஸித்தரான எம்பெருமானார்க்குப் போக்க வொண்ணாத இருளில்லையே.

[பகவத:] ஜ்ஞாநம் சக்தி பலம் ஐச்வர்யம் வீர்யம் தேஜஸ் என்கிற ஆறு குணங்களும் பொருந்தியவிடத்திலே பகவச்சப்தவாச்யத்வம் கிடக்கும். ப்ரஹ்மசப்தம்போலே பகவத் சப்தமும் ஸர்வேச்வரனுக்கு அஸாதாரணம் என்று ஸ்ரீபாஷ்யத்திலே நிஷ்கர்ஷித்திருக்கச் செய்தும் திருக்கையாலே ஸ்ரீ பாஷ்யத்தைப் பட்டோலைகொண்டவரான ஆழ்வான் ஸ்ரீ பாஷ்யகாரர் திறத்திலே பகவத் சப்த ப்ரயோகம் எங்ஙனே செய்கிறாரென்னில், * பீதகவாடைப் பிரானார் பிரமகுருவாகிவந்து * என்றும், * ஸாக்ஷாந் நாராயணோ தேவ: க்ருத்வா மர்த்யமயீம்தநும், மக்நாந் உத்தரதே லோகாந் காருண்யாத் சாஸ்த்ரபாணிநா * என்றுஞ் சொல்லுகிறபடியே ஸாக்ஷாத் ஸர்வேச்வராவதாரமென்றே கொள்ளப்பட்ட ஸ்வாமிவிஷயத்திலே பகவத் சப்தம் பொருந்தக் குறையில்லை. * மண்மிசையோனிகள் தோறும் பிறந்து எங்கள் மாதவனே கண்ணுற நிற்கிலும் காணகில்லா வுலகோர்களெல்லாம் அண்ணலிராமானுசன் வந்து தோன்றியவப்பொழுதே நண்ணருஞானம் தலைக்கொண்டு நாரணற்காயினரே. * (நூற்றந்தாதி 41.) என்கிறபடியே ஸர்வேச்வரனிற்காட்டிலும் மிக்க வைபவமுடையரான ஸ்வாமிக்கேதான் பகவத்சப்தம் நன்கு பொருந்துமென்றும் சொல்லலாம். பகவான்தனக்கும் பகவத்த்வத்தை ஸித்தமாக்கித் தந்தவர் இவரேயன்றோ.

[தயைகஸிந்தோ:] ஆசார்யர்களை இருவகையாகப் பிரித்திருக்கிறார்கள்—அநுவ்ருத்தி ப்ரஸந்நாசார்ய ரென்றும் க்ருபாமாத்ரப்ரஸந்நாசார்யரென்றும். திருக்கோட்டியூர் நம்பி முதலானாரைப்போலே பலகால் துவளவைத்து வருந்தியுபதேசிக்குமாசார்யர்கள் அநுவ்ருத்திப்ரஸந்நாசார்ய ரெனப்படுவர். முலைக் கடுப்பாலே தரையிலே பீச்சுவாரைப் போலே * பயனன்றாகிலும் பாங்கல்லராகிலும் செயல் நன்றாகத் திருத்திப் பணிகொண்டு தம்பேறாக சிஷ்யர்களை உஜ்ஜீவிப்பிக்குமாசார்யர்கள் க்ருபாமாத்ர ப்ரஸந்நாசார்ய ரெனப்படுவர். * ஓராண்வழியாயுபதேசித்தார்·முன்னோர், ஏராரெதிராசரின்னருளால்—பாருலகில் ஆசையுடையோர்க் கெல்லாமாரியர்காள் கூறுமென்று பேசிவரம்பறுத்தார் பின் * என்று மணவாளமாமுனிக ளருளிச் செய்தபடியே, ஓராண்வழியாகப் பூருவர்களுபதேசித்துப் போந்த நியமத்தைக் குலைத்துப் பலரையும் பலர்க்கும் உபதேசிக்கும்படி பண்ணியும், பலகால் திருக்கோட்டியூர்நம்பிபக்கல் நடந்து துவண்டு கேட்ட பரமார்த்தத்தை ஓலக்கமாக வைத்து உபதேசித்தும், ருசிவிச்வாஸஹீநரையும் நிர்ப்பந்தித்து சரமோபாயஸ்தராக்கியும் இப்படி அதிகாரம்பாராமல் அவரவர்களின் துர்க்கதியை மாத்திரமே பார்த்து உபதேசித்தருளுமவரான எம்பெருமானார்க்கு தயைகஸிந்து வென்னும் விருது அஸாதாரணமாகும்.

எம்பெருமானார் திருவடிகளே சரணம்.

---

# எங்குமுள்ள உலகவழக்குக்களினுண்மை.

அநாதிகாலந்தொடங்கி உலகில் எந்நாட்டிலும் சில சொல் வழக்குகள் காணப்படுகின்றன; அவற்றின் தத்துவத்தை விளக்குவோமிங்கு.

ஒரு க்ருஹத்தில் ஏதோ சுபகாரியம். தாம்பூல கோஷ்டி நடைபெற வேண்டிய [illegible]மயம். அப்போது ஒரு பெரியவர் வரவேணுமென்று அவருடைய வருகையை ஆவலோடு [illegible]லர் எதிர்பார்க்கிறார்கள். அவரிடத்தில் பொறாமைகொண்ட வொருவர் அப்போது சொல்லுகிறார்—“ அவருக்காகக் காக்கவேணுமோ ? அவருக்குக் கொம்பு முளைத்திருக்கிறதா என்ன ? ” என்று. இதனால் கொம்பு முளைத்திருந்தால் விசேஷமென்று விளங்குகிறது. ஆடு மாடுகளுக்கல்லவோ கொம்பு முளைத்திருக்கும் ; மனிதர்களுக்குக் கொம்பு முளைப்பதுண்டோ ! இல்லையே. அப்படி யிருக்க “ அவருக்குக் கொம்பு முளைத்திருக்கிறதா என்ன ? ” என்னுமிவ்வார்த்தை எப்படி யுண்டாயிற்று ? என்னில் ; ஸ்ரீராமாயணத்தில் ருச்யச்ருங்கர் என்றும் கலைக்கோட்டு முனிவர் என்றும் சொல்லப்படுகிற மஹர்ஷிக்குக் க[illegible]பு முளைத்திருந்தது. அவர் வந்துதான் அங்கதேசத்தில் துர்பிக்ஷம் நீங்கியது. அவர் வி[illegible]ன் தசரத மன்னவனுடைய வேள்வியும் நிறைவேறியது. அதிலிருந்து கொம்பு [illegible]ளைத்தவர்க்குப் பெருமையுள்ளதாக ப்ரஸித்தியுண்டாயிற்று. அதடியாகவே ‘ அவர்க்குக் [illegible]காம்பு முளைத்திருக்கிறதோ ? ’ என்கிற வார்த்தை தோன்றியது. ‘ அவர் ருச்யச்ருங்கர் [illegible]பாலே பெருமைவாய்ந்தவரோ ’ என்றபடி.

“ வல்லவனுக்குப் புல்லுமாயுதம் ” இதுவுமொரு பழமொழி. இராமபிரான் சித்திரகூடத்தில் பிராட்டியோடு வாழ்ந்தபோது வந்த அபசாரப்பட்ட காகத்தின்மேல் ஒரு தர்ப்பைப் புல்லையே கிள்ளி அஸ்த்ரமாக விட்டார். அதுவே மிகப்பெரிய ஆயுதம்போல் பணி

செய்தது. அதிலிருந்தே 'வல்லவனுக்குப் புல்லுமாயுதம்' என்ற பழமொழி தோன்றியது. * அஸ்த்ராமாஸ த்ருணம் * என்றார் (விச்வகுணாதர்சத்தில்) ஒரு மஹாகவி.

"ஒம்மாச்சி கண்ணைக் குத்தும்"=இதுவும் தொன்றுதொட்டு சிறுவர்களின் வாக்கில் வருகிற வழக்கச்சொல். கீழ்ச்சொன்ன காகவ்ருத்தாந்தத்தில் ஸ்ரீராகவன் காக்கையின் கண்ணைக்குத்தினான். * பொற்றிகழ் சித்திரகூடப் பொருப்பினில், உற்றவடிவில் ஒரு கண்ணுங்கொண்ட அக்கற்றைக்குழலன் * என்றார் பெரியாழ்வாரும். அக்கதையடியாகவே 'ஒம்மாச்சி கண்ணைக்குத்தும்' என்கிற பழமொழி நிகழ்ந்து வருகிறது. ஒம்மாச்சி என்றும் போம்மாச்சி என்றும் இருவகையாகவும் வழக்கம் காண்கிறது. சிறு பிள்ளைகள் முற்காலத்தில் விளையாடத் தொடங்கும்போது பகவத் விக்ரஹங்களை வைத்துக்கொண்டே விளையாடுவது வழக்கம், பொம்மையையே வைத்துக்கொண்டு விளையாடுவது இயல்பாதலால் போம்மாச்சி என்றும் ஒம்மாச்சி யென்றும் மழலைச்சொல்வகையாகும். மரப்பாச்சி யென்று வயது முதிர்ந்தவர்களும் வழங்குவர்கள். ஒம்மாச்சி யென்ற சொல்லின் தத்துவம் இவ்வளவே. பதுமை என்னும் பொருளிலே நிற்கிறது. கண்ணைக்குத்தின பகவானைக் குறிக்கிறது.

குழந்தைகளுக்கு அம்புலி விளையாட்டென்று ஒன்றுண்டு. சந்திரனை யழைப்பது. யசோதைப் பிராட்டியும் கண்ணனை இடுப்பிற் கொண்டு "அம்புலீகடிதோடிவா" என்றழைத்ததைப் பெரியாழ்வார் * தன்முகத்துச் சுட்டி யென்கிற பதிகத்தினால் வெளியிட்டருளியுள்ளார்: இவ்விளையாடல் இன்றைக்கும் நிகழ்கின்றது. 'சந்தமாமா வாவா' என்றே அழைப்பது எங்கும் காண்கிறது. சந்திரனை மாமாவென்று அழைப்பதன் கருத்து என்ன? தாயுடன் பிறந்தவனை மாமாவென்பர்கள். "அகில ஜகந்மாதரம் அஸ்மந்மாதரம்" என்று உலகுக் கெல்லாம் அம்மான் [மாதுலன்] ஆகிறபடியால் சந்திரமாமா வாவாவென்று சைவ வைஷ்ணவ வகுப்புவாசியின்றியும் ஆஸ்திக நாஸ்திக வகுப்புவாசி யின்றியும் அழைக்கக் காண்கிறோம். இதனால் உலகுக்கெல்லாம் தாய்தந்தையர் லக்ஷ்மீ நாராயணர்களென்பது வெளிப்படை. மற்றும் பல தத்துவங்கள் அடைவே வெளிவரும்.

---

## ஸந்தேஹ பரிஹாரம்

"ஸ்ரீகாமகோடிபீடாதிபதிகளான ஜகத்குரு ஸ்ரீசங்கராசார்ய ஸ்வாமிகள் அருளிய நன்மொழிகள்" என்னும் பெயர் பூண்ட புத்தகமொன்று 1933-ம் ஆண்டில் பிரசுரம் செய்யப்பட்டது நமது பார்வைக்கு வந்தது. இதில் ஷை ஸ்வாமிகள் ஆங்காங்கு செய்த உபந்யாஸங்கள் (50) தொகுக்கப்பட்டிருக்கின்றன. இதில் 528 பக்கங்களுக்குப் பிறகு அநுபந்தம் என்றுள்ள பகுதியில் முதல்வியாஸம், சிவ விஷ்ணு அபேதம் என்பது. அது மாம்பலத்தில் செய்யப்பட்ட வுபந்யாஸமாம்.

அதில் (பக்கம் 3-ல்) "ஸ்ரீராமாநுஜர் காலத்திற்கு முந்தியும் விசிஷ்டாத்வைத ஸித்தாந்தம் சிற்சிலரால் அபிமானிக்கப்பட்டுவந்தது. திருமலைநம்பி ஆளவந்தார் நாதமுனிகள் முதலியவர்கள் விசிஷ்டாத்வைதிகள். நாதமுனிகளிடமிருந்து ஸ்ரீராமாநுஜர் உபதேசம் பெற்றதால் விசிஷ்டாத்வைதத்திற்கு நாதோபஜ்ஞயம் என்றும் பெயருண்டு." என்றெழுதப்பட்டுள்ளது. இதைக்கண்ட பலர் நம்மிடம் ஸந்தேஹம் கேட்க வருகிறார்கள். ஸ்ரீமந் நாதமுனிகளின் காலத்திற்கும் ஸ்ரீராமாநுஜர் காலத்திற்கும் இடையில் பலபல

வருஷங்கள் சென்றிருக்கின்றன. ஸ்ரீராமாநுஜரின் ஆசாரியர்களுக்கு ஆசாரியரான ஆளவந்தார்கூட தமது பிதாமஹரான ஸ்ரீமந்நாதமுனிகளைக் காணப்பெறவில்லை. நாதமுனிகளின் சிஷ்யர் உய்யக்கொண்டாரென்கிற புண்டரீகாக்ஷர்; அவருடைய சிஷ்யர் மணக்கால் நம்பி யென்கிற ஸ்ரீராம மிச்ரர். அவருடைய சிஷ்யர் ஆளவந்தாரென்கிற ஸ்ரீயாமுநாசார்யர். அவருடைய சிஷ்யர்களான பெரியநம்பி திருமலைநம்பி திருக்கோட்டியூர் நம்பி முதலானவர்களிடத்தில் ஸ்ரீராமாநுஜர் அர்த்தங்கள் கேட்டவர். ஸ்ரீமந்நாதமுனிகள் பரமபதஞ்சென்று எத்தனையோ வருஷங்களுக்குப் பிறகே ஸ்ரீராமாநுஜருடைய திருவவதாரம் நிகழ்ந்திருக்கின்றது. அவர் ஸ்ரீமந்நாதமுனிகளைப் பார்த்திருக்கவும் ப்ரஸக்தியில்லாமலிருக்க, அவரிடம் உபதேசம் பெற்றதாக எழுதுவது சிறிதும் ஸம்பாவிதமாக இல்லையே; எதுகொண்டு பெரியார் இப்படியெழுதிவிட்டார்? என்று பலரும் கேட்கிறார்கள்.

இதற்கு நாம் இரண்டுவிதமாக ஸமாதானம் சொன்னோம். ஸ்ரீசங்கராசார்யஸ்வாமிகள் செய்த உபந்யாஸங்களைப் பிறர் எழுதியச்சிட்டிருப்பர்கள். இவ்வுபந்யாஸங்களை அவர்கள் தாங்களே தமது கையால் எழுதியிருக்கமாட்டார்கள். அவர்கள் செய்த உபந்யாஸத்தை ஏடுபடுத்தியவர் அநவதானத்தினால் மாறுபடுத்தியிருக்கக்கூடும். ஸ்ரீராமாநுஜர் நாதமுனிகளிடமிருந்து உபதேசம் பெற்றவரென்று ஸ்ரீ ஜகத்குருஸ்வாமிகள் ப்ரமிப்பதற்கு ப்ரஸக்தியே கிடையாது. ஏடுபடுத்தியவருடைய கைப்பிழையாகவேயிருக்கக்கூடும்—என்று ஒரு ஸமாதானம் சொன்னோம்.

ஸ்ரீ ஜகத்குரு ஸ்வாமிகள் தாமே தமது கையினாலேயே இப்படித்தான் எழுதிவைத்தார் என்று ஏற்படுமாயின்; அப்போது அவருடைய அபிப்ராயம் எவ்விதமானது என்பதை அந்த ஸ்வாமிகளையே நேரில் கேட்டுத் தெரிந்துகொள்ளலாமே யென்று மற்றொரு ஸமாதானமும் சொன்னோம். "நாதமுனிகளின் பரம்பரையில் ஸ்ரீராமாநுஜர் உபதேசம் பெற்றவர்" என்கிற அபிப்ராயத்தை மனத்தில் வைத்துக்கொண்டு நாதமுனிகளிடமிருந்து உபதேசம் பெற்றதாக எழுதிவிட்டோம் என்று பெரியார் பதில் சொல்லக்கூடும்.

"விசிஷ்டாத்வைதத்திற்கு நாதோபஜ்ஞ்யம் என்றும் பெயருண்டு" என்று எழுதியிருப்பதுபற்றியும் பலர் கேள்வி கேட்கிறார்கள். [நாதோபஜ்ஞம் என்பது நாதோபஜ்ஞ்யம் என்று அச்சுப்பிழையாக விழுந்திருக்கக்கூடும்; அதுபற்றி விசாரமில்லை.] விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்திற்கு நாதோபஜ்ஞமென்று யாரும் பெயரிட்டிருக்கவில்லை. வேதாந்த தேசிகர் அருளிச்செய்த ஒரு ச்லோகத்தில் * 𑌨𑌾𑌥𑍋𑌪𑌜𑍍𑌞𑌂 𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌂 𑌬𑌹𑍁𑌭𑌿𑌰𑍁𑌪𑌚𑌿𑌤𑌂 𑌯𑌾𑌮𑍁𑌨𑍇𑌯𑌪𑍍𑌰𑌬𑌨𑍍𑌧𑍈𑌃 𑌤𑍍𑌰𑌾𑌤𑌂 𑌸𑌮𑍍𑌯𑌗𑍍𑌯𑌤𑍀𑌨𑍍𑌦𑍍𑌰𑍈𑌰𑌿𑌦𑌮𑌖𑌿𑌲𑌤𑌮𑌃𑌕𑌰𑍍𑌶𑌨𑌂 𑌦𑌰𑍍𑌶𑌨𑌂 𑌨𑌃—நாதோபஜ்ஞம் ப்ரவ்ருத்தம் பஹுபிருபசிதம் யாமுநேய ப்ரபந்தை: த்ராதம் ஸம்யக் யதீந்த்ரைரிதம் அகிலதம:கர்சநம் தர்சநம் ந: * என்று சொல்லப்பட்டிருக்கின்றது. ஆழ்வார்களுக்குப் பிற்பட்ட ஸ்ரீ வைஷ்ணவ ஆசாரியர்களில் முதன்முதலாக நாதமுனிகளால் ப்ரவர்த்திப்பிக்கப்பட்டு ஆளவந்தாருடைய பல திவ்யக்ரந்தங்களினால் வளர்க்கப்பட்டு ஸ்ரீராமாநுஜரால் நன்கு ப்ரதிஷ்டாபிதமானது நம்முடைய தர்சனம் என்பது இந்த ச்லோகத்தின் தாற்பரியம். இதைக் கொண்டு விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்திற்கு நாதோபஜ்ஞமென்றும் ஒரு பெயருண்டென்று எழுதுவது பொருந்தாதே; அப்படியானால் 'பஹுபிருபசிதம் யாமுநேய ப்ரபந்தை:' என்றும் பெயருண்டு; 'த்ராதம் ஸம்யக் யதீந்த்ரை:' என்றும் பெயருண்டு; 'அகிலதம:கர்சநம்' என்றும் பெயருண்டு—என்று பலவும் எழுதிக்கொண்டு போகலாமே என்று இந்த சங்கையையும் சிலர் தெரிவித்தார்கள். இதற்குப்

பரிஹாரமும் அவர்களிடமே நேரில் பெறத்தக்கது என்று சொன்னோம். இதெல்லாம் எழுதினவர்களின் கைப்பிழையாயிருக்குமென்பதே எமது நினைவு.

இந்த வியாஸத்திலேயே * தத் விஷ்ணோ: பரமம் பதம் * என்கிற ச்ருதி வாக்ய விசாரம் செய்யுமிடத்து, "விஷ்ணு என்ற சொல்லில் ஐந்தாம் வேற்றுமையுருபு தொக்கி நிற்பதாகக் கொண்டு விஷ்ணுவைக் காட்டிலும் பரமமாகிய பரமசிவனே" என்று எழுதப் பட்டிருக்கிறது. இங்கு அர்த்தத்தினுள் நாம் விசாரம் செய்ய இறங்கவில்லை. "விஷ்ணு என்ற சொல்லில் ஐந்தாம்வேற்றுமையுருபு தொக்கிநிற்பதாக" என்றெழுதியிருப்பது பொருத்தமான வார்த்தையாகத் தோன்றவில்லை. விஷ்ணோ: பரமம் என்று இல்லாமல் (விஷ்ணு பரமம்) என்று ஸமாஸங்கொண்டிருந்தால் அப்போது ஐந்தாம் வேற்றுமையுருபு தொக்கியிருப்பதாக எழுதலாம். ஸமாஸமாக வன்றிக்கே விஷ்ணோ: என்று வேற்று மையுருபு ஸ்பஷ்டமாகக் காணநிற்பதால் அது தொக்கியிருப்பதாகச் சொல்ல இடமே கிடையாது. இப்படியெல்லாம் பெரியார்கள் எழுதமாட்டார்களன்றோ. ஆகவே, எடுபடுத் தினவர்களின் பிசகுகள் ஏறிவிட்டனவோ வென்று எண்ணவேண்டியிருக்கிறது. ஸ்ரீஜகத் குரு ஸ்வாமிகள் நேரில் திருக்கண்சாத்தித் திருத்திப் பதிப்பித்தல் நன்று.

---

## ஸ்ரீகாஞ்சீ வரதராஜஸ்வாமி தேவஸ்தானம்

உலகம் நிறைந்த புகழ்பெற்ற ஷை தேவஸ்தானத்திற்கு சேலம் ஸ்ரீ. R. மாதவராவ் அவர் கள் எக்ஸிக்யூடிவ் டிரஸ்டியாக நியமிக்கப்பட்டு மூன்று மாதகாலமாக கைங்கரிய நிர்வா ஹம் செய்துவருகிறார். இவர் மிகச் சிறந்த ஆஸ்திகர். வைதிகச்ரத்தையே வடிவெடுத்தவர். பலவிடங்களில் பல யாகங்கள் செய்தவர். இந்த காஞ்சீபுரியிலேயே மிகப்பெரிய யாக மொன்றை இரண்டு வருடங்களுக்கு முன்பு இவர் செய்திருப்பது உலகமறிந்ததே. இப் படிப்பட்ட தார்மிகர் இங்கு ஆலயதர்ம பரிபாலனத்திற்கு விஜயம் செய்திருப்பது பக்தர் களின் பரமபாக்கியமேயாகும். ஆனால், இவரால் ஷை தேவஸ்தானத்தில் பஞ்சபர்வோத்ஸ வங்களெல்லாம் ஜாடாக நிறுத்தப்பட்டுவிட்டன வென்கிற ஒரு பெரிய குறை தோன்றி யிருக்கிறது. ஏகாதசி, அமாவாஸ்யை, பௌர்ணமி, மாதப்பிறப்பு, திருவோணம், வெள் ளிக்கிழமை — இப்படிப்பட்ட விசேஷ நாட்களில் அற்புதமாக அநாதி காலமாய் நடந்து வந்த திவ்யோத்ஸவம் அடியோடு நிறுத்தப்பட்டுவிட்டதிப்போது. வருமானமில்லை யென்று காரணம் சொல்லப்படுகிறது. ஏறக்குறைய பதினையாயிரம் ரூபாய் வருமானமுள்ள தேவஸ்தானமிது. நைமித்திகங்களான பெரிய வுத்ஸவங்களெல்லாம் பெரும்பாலும் உபய மாகவே நடந்து விடுகின்றன. சில பெரிய உத்ஸவங்களுக்கு உபயக்காரர்கள் இல்லை யென்றால் அவ்வுத்ஸவம் அடியோடு நிறுத்தப்பட்டு விடுகிறது. ஸமீபத்தில் ரதஸப்தமி யுத்ஸவம் அடியோடு நிறுத்தப்பட்டுவிட்டது மிகவும் சோசநீயம். தினப்படியில் பெருமாள் அமுது செய்கிற ப்ரஸாதம் மிகச் சிறிய அளவிலுள்ளது. ஸ்ரீரங்கம் திருப்பதி முதலான தேவஸ்தானங்களில் ஒருநாளைக்கு அமுது செய்தியாகிற ப்ரஸாதம் நம் தேவப்பெருமாளுக்கு ஒரு வருஷத்திற்குக் காணும் என்று சொல்லுகிறார்கள். இப்படிப்பட்ட பல குறைகளால் பக்தர்களின் மனம் மிகவும் பரிதாபமுற்றிருக்கின்றது. இக்குறைகளைப் பேரருளாளனே போக்கியருளவேணும்.

---

# "இவள் ஸந்நிதியாலே காகம் தலைபெற்றது; அதில்லாமையாலே ராவணன் முடிந்தான்."

பிள்ளைலோகாசாரியரருளிச்செய்த முமுக்ஷுப்படியில் த்வயப்ரகரணத்திலுள்ள மேற்குறித்த ஸ்ரீஸூக்தியின்மீது பெரியார்க்குத்தோன்றும் சங்கைக்குப் பரிஹாரமுணர்த்த எழுகின்றோம். 'இவள் ஸந்நிதியாலே' இத்தியாதிவாக்யத்திற்கு முந்தின வாக்யம் "இத்தால் ஆச்ரயிக்கைக்கு ருசியே வேண்டுவது" என்றிருப்பதால் எம்பெருமானை ஆச்ரயிக்குமளவில் இது சொல்லப்படுகிறதென்று தெரியவருகிறது. ஆகவே, காகம் ஆச்ரயித்தபோது பிராட்டியின் ஸந்நிதி யிருந்தபடியாலே அது தலை பெற்றது; ராவணன் ஆச்ரயித்தபோது பிராட்டியின் ஸந்நிதியில்லாமையாலே அவன் முடிந்தான்—என்று அருளிச்செய்வதாகத்தானே மேற்குறித்த வாக்கியத்திற்குப் பொருள் தேறுகிறது வேறு விதமாகப் பொருள் கொள்வதற்கில்லையே. இப்படியாகில் காகம்போலே ராவணனும் சரணாகதி செய்ததாகப் பிள்ளை லோகாசார்யர் திருவுள்ளம்பற்றி யிருப்பதாகக் கொள்ளவேண்டி வருகிறதே. ஸ்ரீராமாயணத்தில் ஓரிடத்திலும் ராவணன் சரணாகதிசெய்ததாகக் காணவில்லையே. அவன் பிராட்டியின் அஸந்நிதியிலே சரணாகதி செய்திருந்து அது விபலமாகியிருந்தாலன்றோ அதையெடுத்துக் காட்டலாம்; காகம் பிராட்டியின் ஸந்நிதியிலே சரணாகதி செய்தபடியாலே ஜீவித்துப்போயிற்று; ராவணன் அப்படி பிராட்டியின் ஸந்நிதியிலே சரணாகதி செய்யாமல் அவளுடைய அஸந்நிதியிலே செய்தபடியால் அவன் ஜீவியாதொழிந்தான்—என்று நிரூபணம் செய்தாலன்றோ விவக்ஷிதமான விஷயம் அவகாஹிக்கும். அப்படி நிரூபணம் செய்வதற்கு விஷயமில்லாதிருக்க "அதில்லாமையாலே ராவணன் முடிந்தான்" என்ற ஸ்ரீஸூக்தி அவதரிக்க நியாயமில்லையே! என்பது சங்கை.

**இதற்குப் பரிஹாரம் கேண்மின்;**— காகமோ ராவணனோ சரணாகதிசெய்தானென்பதைப் பற்றி இங்கு விஷயமேயில்லை இந்தப்ரகரணத்தில் பிராட்டியின் புருஷகாரம் அவச்யமென்றும் அஃது இல்லையாகில் எம்பெருமான் கார்யம் செய்யானென்றும் அருளிச்செய்யப்பட்டுவருகிறது. இதை ஸ்தாபிப்பதற்காகப் பிராட்டிக்கு ஸ்ரீராமாயணஸித்தமான வொருபெருமை இங்குக் காட்டப்படுகிறது. அந்தப் பெருமை யாதெனில்; எப்படிப்பட்ட அபராதிகளாயிருந்தாலும் பிராட்டி பெருமாளோடு கூடியிருக்குங்காலத்தில் அவர்களுக்கு விநாசம் ப்ராப்தமாகிறதில்லை. அபராதத்தில் குறைய நின்றவர்களாயிருந்தாலும் பிராட்டிஸம்பந்தமற்ற எம்பெருமானாலே விநாசமடைவிக்கப்பட்டே தொலைந்தொழிகிறார்கள்—என்பதேயாம். இது ஸ்ரீராமாயணத்தில் ஆதியோடந்தமாகவுள்ள கதைகளினால் நன்கு விளங்குகின்றது. சிறிது நிரூபிப்போம்;

மாமுனிவேள்வியைக் காக்கச் சென்றபோது தாடகாதாடகேயர்களைக் கொன்றகாலத்தில் பெருமாளுக்குப் பிராட்டியின் ஸம்பந்தமுண்டாகவேயில்லை. ஆனதுபற்றியே பெருமாள் பெண் கொலையென்றும் பாராமல் தாடகாவதம் பண்ணநேரிட்டது. பிராட்டியோடு கூடப்பெற்ற பின்பு அபராதிகளுக்கும் பரித்ராணமேயொழியக் கொலையென்பது கிடையாது. விராதவதமும் கரதூஷணாதி வதமும் பிராட்டியோடு கூடியிருந்த காலத்தில்தானே நடைபெற்றிருக்கின்றனவென்று சிலர் கேட்கக் கூடும். அவர்களுக்குச் சொல்லுகிறோம். ஆரண்ய காண்டத்தில் இரண்டாவது ஸர்க்கத்தில் விராத ப்ரஸ்தாவம் வருகிறது. விராதன் வந்ததும் பிராட்டியைக் கொள்ளை கொள்கிறான். பிறகு அவளை விட்டுவிட்டு ஸ்ரீராமலக்ஷ்மணர்களைத் தூக்கிக்கொண்டு வேறொரு வனத்தில் நுழைகிறான். அப்போது பிராட்டி தான் தனித்துநின்றுபோனதைக் குறித்துப் புலம்புகிறாள். [இவ்விஷயம் ஆரண்ய—மூன்றாவது ஸர்க்கத்தின் முடிவிலும் நான்காவது ஸர்க்கத்தின் முதலிலும் ஸ்பஷ்டமாகவுள்ளது.] சீதை தன்னைத் தனியாக விட்டிட்டு ராமலக்ஷ்மணர்களை விராதன் வேறொரு காட்டுக்குத் தூக்கிச்சென்றபோது 'ஓ! அரக்கனே, இனி என்னைச் செந்நாய்களும் பெரும் புலிகளும் சிறுத்தைகளும் கொன்று தின்றுவிடுமே! தாசரதிகளைவிட்டு என்னைக்கொண்டுபோகலாகாதா?' என்று கதறுகின்றாள், இதனால் விராதவதமாகிற காலத்தில் பிராட்டியின் ஸன்னிதானமில்லையென்பது ஸ்பஷ்டமாகத் தெரிகிறது. தவிரவும், ராமலக்ஷ்மணர்கள் அவ்வரக்கனை எவ்வளவு ஹிம்ஸித்தும் அவன் வதமடையவேயில்லை. இதை வால்மீகிமுனிவரே கூறுகின்றார்— * स विद्धो बहुभिर्बाणैः खड्गाभ्यां च परिक्षतः । निष्पिष्टो बहुधा भूमौ न ममार स राक्षसः—ஸ வித்தோ பஹுபிர் பாணை: கட்காப்யாஞ்ச பரிக்ஷத:, நிஷ்பிஷ்டோ

பஹூதா பூமௌ ந மமார ஸ ராக்ஷஸ:* என்கிறார். பிறகு விராதன் தனது வரலாறுகளைத் தானே சொல்லிக்கொண்டு 'இராம! இப்பொழுது உன்னால் நான் சாபவிமோசனமடைந்தேன்; என்னைப் பள்ளம்வெட்டிப் புதைத்துவிடு' என்றான். மேற்காரியம் அப்படியே நடந்திருக்கிறது. இதனால் விராதன் தன் வதையைத் தானே வேண்டிச்செய்வித்துக்கொண்டானென்பது விளங்குகின்றது. இதுவும் பிராட்டியின் முன்னிலையில் நடைபெறவில்லை ஆக, இந்தவதம் அநுக்ரஹரூபமாகவே முடிந்தது.

இனி, கரதூஷணாதி வதத்தைப்பற்றிச்சொல்லுவோம். ராக்ஷஸப் பெருஞ்சேனைகள் இராமனைக் கிட்டிவந்தபோது லக்ஷ்மணனைநோக்கி இராமன் கூறியதாவது—லக்ஷ்மண நீ வில்லையும் பாணங்களையும் தரித்துச் சீதையை யழைத்துக்கொண்டு அதோ மரங்களால் மறைக்கப்பட்டு நுழையக்கூடாதிருக்கின்ற குகைக்குள் பிரவேசித்துக் காத்துக்கொண்டிரு; தாமதம் செய்யாமல் விரைந்துசெல். நீயும் இத்தனை யரக்கர்களையும் வதைக்கவல்லை; ஆயினும் இப்பொழுது நானே இவர்களையெல்லாம் கொலை செய்யக் கருதியிருக்கிறேன்; நீ சீதையுடன் புறப்பட்டுப் போய்விடு என்று. அப்படியே லக்ஷ்மணன் சீதையுடன் சென்று குகைக்குள் நுழைந்தபின்பே இராமன் கவசங்களைத்தரித்து வில்லையும் அம்புகளையுமெடுத்துக்கொண்டு போர்க்கு எழுந்தனன் என்று (ஆரண். இருபத்திநான்காவது ஸர்க்கத்தில்) சொல்லப் பட்டுள்ளது. * தஸ்மாத் க்ருஹீத்வா வைதேஹீம் சரபாணிர் தநுர்தர:, குஹாமாச்ரய சைலஸ்ய துர்க்காம் பாதபஸங்குலாம் ப்ரதிகூலிதுமிச்சாமி ந ஹி வாக்யமிதம் த்வயா, சாபிதோ மம பாதாப்யாம் கம்யதாம் வத்ஸ மா சிரம்......தஸ்மிந் ப்ரவிஷ்டே து குஹாம் லக்ஷ்மணே ஸஹ ஸீதயா * என்கிற ச்லோகங்கள் காணத்தக்கன. இது கொண்டே தேசிகன் ரகுவீரகத்யத்தில் கரவதகதா ப்ரகரணத்தில் "அஸஹாயசூர!" என்றது ஆகவே இங்கும் பிராட்டியின் ஸந்நிதானமில்லையென்பது விளங்கிற்று.

இதற்குப் பிறகு ஸீதாவிச்லேஷம் நேர்ந்துவிட்டது அப்போது வாலிவதம் நடந்திருக்கின்றது. அஃதொரு பெரியவிஷயம். இதுவரை நாம் விவரித்த விஷயத்தைக் கம்பர் அங்கு வாலியின் வார்த்தையாக எடுத்துரைக்கின்றார். அந்தச் செய்யுள் இன்சுவையே வடிவெடுத்தது. அதாவது

"கோவியல்தரும முங்கள் குலத்துதித்தோர்கட் கெல்லாம், ஓவியத் தெழுதவொண்ணா வுருவத்தா யுடைமையன்றே? ஆவியைச் சனகன்பெற்ற வன்னத்தை அமிழ்தின்வந்த தேவியைப் பிரிந்தபின்னைத் திகைத்தனைபோலுஞ்செய்கை." என்பதாம். வாலி, குற்றமற்றவனான தன்னை இராமபிரான் வதஞ்செய்ததற்குக்காரணம் பிராட்டி பக்கத்திலில்லாமையேயென்று அறுதியிட்டுக் கூறினன். அது உண்மையான காரணமே. கம்பர்பெருமான் ஸ்ரீபட்டர்போன்ற ஆசார்யர்களின் காலக்ஷேபகோஷ்டிகளில் அந்வயித்திருந்து கேட்ட விசேஷார்த்தத்தையே இங்ஙனம் பேசிறித்துள்ளார். அரசாணிபாலை வேங்கடாத்வரி இயற்றிய லக்ஷ்மீஸஹஸ்ரத்தில் * த்வய்யேவாயததே க்ருபா ரகுபதே:* என்னும் ச்லோகத்தில் இவ்வர்த்தமே வெகு அற்புதமாக அமைக்கப்பட்டிராநின்றது. ஆஸுரப்ரக்ருதியான காகத்தின் குற்றத்தையும் வாலியின் குற்றத்தையும் ஒத்திட்டுப் பார்த்தால் காகத்தின் குற்றமே மிகப்ரபலமாயிருக்கும். வாலியிடத்து அவ்வளவு குற்றம் காணமுடியாது. அப்படியிருந்தும் காகத்திற்கு ரக்ஷணமும் வாலிக்கு வதமும் கண்டதென்றால் ஸீதாபிராட்டியின் ஸந்நிதியும் அஸந்நிதியுமே இதற்குக் காரணமென்னத் தட்டில்லையன்றோ.

முமுக்ஷுப்படியில் பிள்ளை லோகாசார்யர் வாலியைத் தொடாமல் ராவணனைத்தொட்டு "அதில்லாமையாலே ராவணன் முடிந்தான்" என்றருளிச்செய்தது எதனாலென்னில், ஸ்ரீராமாயணத்தில் இராமபிரானால் வதஞ்செய்யப்பட்ட நபர்களுள் இராவணனே முடிவானவன். அவனுக்குப் பிறகு வதைக்கப்பட்டார் தெரியவில்லை. [* செறிதவச் சம்புகன்றன்னைச் சென்றுகொன்று * என்னப்பட்ட சம்பூகவதமும் ஸீதாவியோகத்தில்தான் நடைபெற்றிருக்கிறது.] காகத்துக்கும் ராவணனுக்கும் அபராதத்தில் வாசிபார்க்குமளவில் ராவணனது குற்றம் அற்பமாய் காகத்தின் குற்றமே மேலாயிருக்கும். * விததார ஸ்தநாந்தரே * என்னும்படி திருமுலைத்தடத்திலே ரத்த வெள்ளம் பெருகும்படி மஹாபராதம் செய்த தன்மை ராவணன்பால் காணமுடியாததன்றோ. அபராதத்தில் குறையநின்ற ராவணனையே தலையறுத்தாரென்றால் அவனிலும் விஞ்சிய குற்றவாளனான காகனை என்செய்திருக்கவேண்டும். தலையறுப்பதற்கு மேற்பட்ட தண்டமில்லாமையாலே அதையாவது அவச்யம் செய்திருக்கவேண்டுமே. அதுசெய்யாதொழிந்தது பிராட்டியின் ஸந்நிதியினாலேயே என்று நிச்சயிக்கப்படுகிறது.

காக வ்ருத்தாந்தம் ஸ்ரீவால்மீகி ராமாயணத்திற்காட்டிலும் பாத்மோத்தரத்தில் சிறிது விரிவாகக் கூறப்பட்டிருக்கின்றது. சிறிது வாசியும் காண்கிறது ஸ்ரீராமாயணத்தில் * நசாப்யுபாரமந் மாம்ஸாத் பக்ஷ்யார்த்தீ பலிபோஜநः......பக்ஷக்ருத்நேந காகேந * என்று காகம் மாம்ஸபக்ஷணத்தில் ஆசையினால் வந்ததாகச் சொல்லப்பட்டது. பாத்மத்திலோ வென்னில், *ஸ த்ருஷ்ட்வா ஜாநகீம் தத்ர கந்தர்ப்பசரபீடிதः, விததார நகைஸ் தீக்ஷ்ணைः பீநோந்நதபயோதரௌ* என்று காகனும் இராவணனைப்போல் காமபீடிதனாகவே வந்து அபசாரப்பட்டனாகச் சொல்லிற்று. அன்றியும் * புரதः பதிதம் தேவீ தரண்யாம் வாயஸம் ததா, தச் சிரः பாதயோஸ் தஸ்ய யோஜயாமாஸ ஜாநகீ. ப்ராணஸம்சயமாபந்நம் த்ருஷ்ட்வா ஸீதாத வாயஸம், த்ராஹி த்ராஹீதி பர்த்தாரம் உவாச தயயா விபும் * என்றும் அப்புராணத்தில் சொல்லிற்று. பிராட்டி தானே காகத்தின் தலையையெடுத்துப் பெருமாள் திருவடியோடே சேர்த்து சரணாகதி செய்ததாகக் காட்டி இவனை ரக்ஷித்தருளவேணுமென்று வேண்டினதாகக் கூறப்பட்டிருக்கிறது. இப்படிப்பட்ட காருண்ய ரூபிணியான பிராட்டி ராவணவத காலத்தில் அருகே யிருந்தாளாகில் அவனை வதைசெய்யப் பார்த்திராள். அவள் அருகே யில்லாதபடியினால்தான் ராவணன் முடியும்படியாயிற்று.

இப்படி நாம் நிரூபணம் செய்ததைக் கண்ட பிறகு பிறர் கேட்கக் கூடியது ஒன்றுண்டு. அதாவது, பிராட்டிக்கு இப்படிப்பட்ட பெருமையுள்ளதென்பது உண்மையே. முமுக்ஷுப்படியில் எந்த இடத்தில் இது காட்டப்பட்டிருக்கிறதோ அந்த இடத்திற்கு இது ஆவச்யகமாகவோ பொருத்தமாகவோ இல்லையே. “ஆச்ரயிக்கைக்கு ருசியே வேண்டுவது காலம் பார்க்கவேண்டா வென்கிறது” என்று கீழே சொல்லிவிட்டு உடனே இது சொல்லியிருக்கையாலே காகத்திற்குப் போல் ராவணனுக்கும் ப்ரணதிப்ரஸக்தியிருக்கவேணுமே; அது இல்லையே— என்று இந்த வாதத்தையே மீண்டும் செய்யக்கூடும். இங்குச் சிலர் சொல்லக்கூடிய ஸமாதானம் கேண்மின்.

கீழே திருமந்த்ர ப்ரகரணத்தில் நாராயணத் திருநாமத்தின் பெருமையைச் சொல்லிவருமிடத்து, (14) “வாச்யப்ரபாவம் போலன்று வாசகப்ரபாவம்; அவன் தூரஸ்தனானாலும் இது கிட்டி நின்றுதவும்; த்ரௌபதிக்கு ஆபத்திலே புடவைசுரந்தது திருநாமமிறே.” என்றருளிச்செய்துள்ளார். நாராயண நாமத்தின் பெருமையை உபபாதிக்க வேண்டுமிடத்து அதைவிட்டு கோவிந்த நாமத்தின் பெருமையை உபபாதித்தருளி யிருப்பது ஸமஞ்ஜஸமாகுமோ? என்கிற கேள்வி தோன்றியே தீரும். இதற்கு அவ்விடத்தில் மணவாளமா முனிகள்— “நாராயணசப்தார்த்தத்தில் ஏகதேசத்துக்கு வாசகமானதொரு திருநாமம் செய்தபடி கண்டால் இதின் ப்ரபாவம் கிம்புநர்ந்யாய ஸித்தமிறே யென்று கருத்து” என்று ஆழ்ந்து அருளிச் செய்துள்ளார். ஸாக்ஷாத்தாகத் தேறும் ப்ரபாவத்திற்காட்டிலும் கைமுதிகந்யாயத்தினால் தேறும் ப்ரபாவம் சிறந்ததாகும். அதுவே ப்ரக்ருத ஸ்தலத்திலும் காணத்தக்கது. எங்ஙனே யென்னில்; பிராட்டி பெருமாளருகே யிருந்த மாத்திரத்தினாலேயே ஆர்த்ராபராதிகளுக்கும் ரக்ஷணமும், அவள் அருகிலில்லாதபோது அல்பாபராதிகளுக்குங் கூட வதமும் காணப்பட்டால், அப்பிராட்டி * கிமேதந் நிர்தோஷः க இஹ ஜகதி * என்றாற்போன்ற உபதேசங்களையுஞ் செய்து தன்னுடைய வாக்கை அதிகமாக உபயோகப் படுத்தினாளாகில் எம்பெருமான் ரக்ஷித்தே தீருவனென்னுமிடம் கேட்கவேணுமோ? என்று சொல்லுவது இங்கு விவக்ஷிதம்.

மேலே விவரித்த விதமாக ஸமாதானம் கூறலாமானாலும் விசதவாக் சிகாமணிகளான மணவாளமாமுனிகளின் திருவுள்ளம் இனி விசதீகரிக்கப்படுகிறது.

“இவள் ஸந்நிதியாலே” இத்யாதி சூர்ணைக்கு மாமுனிகள் இட்டருளி யிருக்கிற அவதாரிகையும் மேலேயுள்ள ஸ்ரீஸூக்தி விந்யாஸங்களும் மிக்க தெளிவை யுண்டாக்கும். அவதாரிகை— “இனி இவள் புருஷகாரத்வத்தின் அவச்யாபேக்ஷிதத்வத்தை அறிவிக்கைக்காக இவள் ஸந்நிதிக்கும் அஸந்நிதிக்கு முண்டான வாசியையருளிச் செய்கிறார்” என்றுள்ளது. மேலே காகத்துக்கு இடுகிற விசேஷணமும் ராவணனுக்கிடுகிற விசேஷணமும் கவனிக்கவுரியது. “அபராதத்தைத் தீரக்கழியச் செய்து ப்ரஹ்மாஸ்த்ரத்துக் கிலக்காய்த் தலையறுப் புண்ணத் தேடின காகம்” என்பது காகத்தைப் பற்றின ஸ்ரீஸூக்தி. “காகத்தோபாதி அபராதமுமின்றிக்கே யிருக்க ராமசரத்துக் கிலக்காய் ராவணன் முடிந்து போனான்” என்பது ராவணனைப் பற்றின ஸ்ரீஸூக்தி. இத்தால் தேறுவது என்ன? பிராட்டி அருகே யிருந்து

விட்டாளாகில் பாபபூயிஷ்ட ஜந்துவும் உய்வு பெற்றிடும்; அவள் அருகே இல்லையாகில் அல்பாபராத ப்ராணியும் நாசம் பெற்றிடும் என்பதே. ஆகவே பிராட்டியின் ஸன்னிதி ஆவச்யக மென்று முடிந்தது.

இந்த ப்ரஸ்தாவத்தில் மற்றொரு சாஸ்த்ரார்த்தமும் மணவாளமாமுனிகளால் வெளியிடப் பட்டுள்ளது. கேண்மின்; காகம் ஜீவித்ததற்கும் ராவணன் முடிந்ததற்கும் பிராட்டியின் ஸந்நிதியும் அஸந்நிதியும் காரணமன்று; காகம் சரணாகதி செய்தபடியாலே ஜீவித்தது; ராவணன் அது செய்யாத படியாலே முடிந்தான். இவ்வளவே காரணம்—என்று சிலர் சொல்லக்கூடும். இந்த வாதமும் மண வாளமாமுனிகளின் ஸ்ரீஸூக்தியினால் கிள்ளிக்களையப்படுகிறது. "போக்கற்றுச் செயல்மாண்டு நின்ற நிலை ஒத்திருக்கச் செய்தேயும்" என்கிற வொரு ஸ்ரீஸூக்தியை மாமுனிகள் இங்கு அருளியுள்ளார். ஸ்ரீராமயாணத்திலும் பாத்மத்திலும் * ஸ தம் நிபதிதம் பூமௌ * என்றும் * புரதஃ பதிதம் தேவீ தரண்யாம் வாயஸம் * என்றும் காகம் தரிப்பற்றுத் தரையில் விழுந்தமாத்திரமே சொல்லிற்றே யொழிய சரணாகதி செய்ததாகச் சொல்லிற்றில்லை. * த்ரீந் லோகாந் ஸம்பரிக்ரம்ய தமேவ சரணம் கத: * சரண்யச் சரணாகதம் * என்று சொல்லியிருக்கிறதே யென்னில்; * உபாயே க்ருஹரக்ஷித்ரோச் சப்தச் சரணமித்யயம் * என்கிறபடியே சரணசப்தம் க்ருஹவாசகமாய் க்ருஹத்திலே வந்து விழுந்தா னென்றதத்தனை. * ந நச்யந்த முபேக்ஷ்யம் ப்ரதீப்தம் சரணம் யதா * என்ற விபீஷண வாக்யத் தில் க்ருஹவாசகமாகவே சரணசப்தத்தை வால்மீகி ப்ரயோகித்திருப்பது காணலாம். சரணாகதி செய்த தாகவே கொண்டாலும் அது பிராட்டியின் திருவுள்ளத்தாலேயாமத்தனை. எங்கும் நிற்கமுடியாமல் தரிப்பற்றுத் தரையில் விழுந்ததையே திவ்யதம்பதிகள் தங்கள் நீர்மையினாலே சரணாகதியாகக் கொள்ளலாமன்றோ. அங்ஙனே கொண்டது கொண்டே ஸ்ரீவசநபூஷணத்தில் "தர்மபுத்ராதிகளும் த்ரௌபதியும் காகமும் காளியனும்" என்று, சரணம் புகுந்தவர்களிலே காகமும் சேர்த்துச் சொல்லப் பட்டது.

ஸ்தோத்ரரத்நத்தில் (63) * ரகுவர! யதபூஸ் த்வம் தாத்ருசோ வாயஸஸ்ய ப்ரணத இதி தயாலுஃ * என்றவிடத்து தேசிகன் (ஸ்தோத்ர பாஷ்யத்தில்) "ப்ரணத இதி—த்ரீந் லோகாந் ஸம் பரிக்ரம்ய கத்வா பூமௌ நிபதிதம் தயார்த்ரபுத்த்யா ப்ரணதத்வேந பரிக்ருஹ்ய" என்றெழுதியுள் ளார். இதனால், காகம் நமஸ்கரித்து சரணாகதி செய்யவில்லையென்றும் கருணாகாகுத்ஸ்தனுடைய திரு வுள்ளத்தினாலே சரணாகதனாகக் கொள்ளப்பட்டவத்தனை யென்பதும் காட்டப்பட்டது. * எத்திசையு முழன்றோடி யிளைத்து விழும் காகம்போல் * என்று அடைக்கலப்பத்திலுமுள்ளது. இளைத்து விழுந்த வத்தனையே யொழிய சரணாகதி செய்தமையில்லையென்று விளக்கினவாறு.

ஆழ்வானும் அதிமாநுஷஸ்தவத்தில் * யத் த்வம் க்ருதாகஸமபி ப்ரணதிப்ரஸக்தம் தம் வாய ஸம் பரமயா தயயா அரக்ஷிஷ்டாஃ * என்றதில் "ப்ரணதம் வாயஸம்" என்னாதே "ப்ரணதி ப்ரஸக்தம் வாயஸம்" என்றது மருமமான வார்த்தையாகும். காகம் சரணாகதி செய்ததாக ஒரு யோஜனை யிருந்தாலும், ப்ரக்ருதத்தில் மணவாளமா முனிகளின் திருவுள்ளத்தில் அந்தயோஜனை யில்லை; "போக் கற்றுச் செயல்மாண்டு நின்றநிலை" என்று ஸ்வயத்தமாக அருளிச்செய்திருக்கையாலே.

"பகவத் ப்ரவ்ருத்தி விரோதி ஸ்வப்ரவ்ருத்தி நிவ்ருத்தியே ப்ரபத்தி" என்கிற கொள்கைப் படி காகத்தினிடத்தில் எவம்விதமான ப்ரபத்தியுண்டானபடியால்தான் காகுத்தன் காத்தருளினன்; பிராட்டியின் ஸன்னிதியினால் காத்தருளினமையில்லை—என்று இவ்வண்ணமாகத்தானே பிறர்சிலர் வாதிக்க வேணும். அப்படியானால் * சசால சாபஞ்ச முமோச வீரஃ * என்கிறபடியே, போக்கற்றுச் செயல் மாண்டுநின்றநிலை காகத்துக்குப்போல ராவணனுக்குமுள்ளதாகையாலே அதுகொண்டு பெருமாள் அவனையும் ரக்ஷித்திருக்கவேண்டும். என் ரக்ஷிக்கவில்லையென்று விசாரிக்குமளவில் 'பிராட்டிஸன்னிதி யில்லை, அதனால்தான்' என்று சொல்லித்தீரவேண்டும். என்றிவ்வளவு விஷயங்களையும் மாமுனிகள் நன்குகாட்டியருளியுள்ளார்.

## நிகமனம்.

சேதனன் சரணாகதி செய்பவன்; காருணிகனான ஸர்வேச்வரன் பலன்கொடுப்பவன்; இப்படி யிருக்க, பிராட்டியின் சேர்த்திவேணுமென்பது எதற்காக? என்கிற சங்கையின்மேல், பிராட்டி ஸன் னிதி ஆவச்யகமேயென்று நிரூபிக்கவேண்டியதாயிற்று. அதற்காக, பிராட்டியின் ஸன்னிதியிலே ஆச்ரயித்தவர்கள் பேறு பெற்றபடியையும், அவளுடைய அஸந்நிதியிலே ஆச்ரயித்தவர்கள் பேறிழந்தபடி

-யையுமன்றோ காட்டவேண்டும்; அப்படி காட்டியிருக்கவில்லையே; முடியுந்தனையும் 'நநமேயம்' என்றே இறுமாந்துகிடந்த ராவணனை இங்கெடுத்துக் காட்டியிருப்பது என்? என்பது சங்கை.

ஆச்ரயித்தல் என்கிற விஷயங் கிடக்கட்டும். ஆச்ரயிக்கவுமாம், ஆச்ரயியாமல் போகவுமாம்; ஆச்ரயணம் ப்ரதானமன்று; அதுவன்று கார்யகரம்; பிராட்டியின் ஸன்னிதிதான் காரியகரம். அவளுடைய அஸந்நிதிதான் கார்யபஞ்ஜகம்—என்பதே நிரூபிக்கப்படவேண்டியது அவசியம். "இவள் ஸந்நிதியாலே" இத்யாதி வாக்யத்தால் அதுவே நிரூபிக்கப்பட்டதாயிற்று. ராவணனையெடுத்தது ராவணமாத்ரவிவக்ஷயா அன்று என்பது கீழே பரக்கநிரூபிதம்.

---

## 2. மற்றொரு சங்கைக்கும் பரிஹாரம்.

முமுக்ஷுப்படியிலேயே திருமந்த்ரப்ரகரணத்தில் (47) "ஆக இச்சேர்த்தி உத்தேச்யமாய் விட்டது" என்ற சூர்ணையின் வியாக்கியானத்திலே—"இச்சேர்த்தி உத்தேச்யமென்கையாலே இவர்களைத் தனித்தனியே விரும்புகை உத்தேச்யமன்று என்றபடி. இருவரையும் பிரித்து விரும்பினால் ராவண சூர்ப்பணகைகளுக்குப் போலே அநர்த்தமே பலிக்குமித்தனை; இருவரையும் பற்றினாலிறே ஸ்ரீவிபீஷணாழ்வானைப்போலே வாழலாவது" என்பது மணவாளமாமுனிகளின் திவ்யஸூக்தி. இவ்விடத்திலும் சிலர் சங்கிப்பதாவது—இங்கு விரும்புகையென்று பக்தி பூர்வகமான (அல்லது) பக்திரூபமான விருப்பந்தானே விவக்ஷிதமாகவேணும். காமத்தினால் விரும்புவது ஒரு பொருளன்றே. சூர்ப்பணகை ராமனை விரும்பினதும் காமத்தினால்; இராவணன் பிராட்டியை விரும்பினதும் காமத்தினால். ஆகவே இவர்களின் விருப்பம் உத்தேச்யமான விருப்பத்தில் சேர்ந்ததன்றே. அப்படியிருக்க, பக்தியுக்தர்களுக்கு மிதுநமே உத்தேச்யமென்று அருளிச்செய்து வருமிடத்தில் இவ்விஷயம் எடுத்துக்காட்டத்தகுமோ? ஈச்வரனுக்கும் சேதநனுக்குமுள்ள நவவிதஸம்பந்தங்களில் பர்த்ருபார்யாபாவரூப ஸம்பந்தமும் போக்த்ரு போக்யபாவரூப ஸம்பந்தமும் சேர்ந்திருக்கையாலே சூர்ப்பணகையின் விருப்பத்தைக் கோல்விழுக்காட்டிலே அநுரூபமாகக் கொண்டாலும் கொள்ளலாம். இராவணனுடைய விருப்பத்தை அப்படிக் கொள்வதற்கில்லையே. ஆனபின்பு ப்ரக்ருதஸ்தலத்தில் ராவண சூர்ப்பணகைகளின் ப்ரஸ்தாவம் எங்ஙனே பொருந்தும்? என்று.

இதற்குப் பரிஹாரம் கேண்மின். திவ்ய தம்பதிகள் சேரவிருக்கப்பார்க்கை நமக்கு ஸ்வரூபாநுரூபமேயல்லது அவர்களைப் பிரியப்பார்க்கை உற்றதன்று என்பதே இங்கு விவக்ஷிதம். ஆச்ரயண ப்ரஸ்தாவம் திருமந்திரத்தில் கிடையாது, அது த்வயத்திலுள்ளது. வஸ்துஸ்திதி மாத்ரமே திருமந்திரத்தில் நிரூபிக்கப்படுவது. பிராட்டியோடுகூடியே எம்பெருமானுடைய வுண்மையென்று சொல்லி, அந்தச்சேர்த்தியையே நாம் நெஞ்சிற்கொள்ளவேணுமென்றும் சொல்லி முடித்தார் மூலகாரரான பிள்ளை லோகாசார்யர். அதை ஸூத்ருடப்படுத்தியருளுகிற மணவாளமாமுனிகள், திவ்ய தம்பதிகளின் சேர்த்தியை ஸஹியாதே இவர்களைப் பிரிக்கப்பார்த்தவர்கள் அடைந்த அனர்த்தத்தையும், சேர்த்தியையே கோலினவர் பெற்ற பேற்றையுஞ் சொல்லி த்ருடப்படுத்துகிறார். பெரியாழ்வார் திருமொழியில் (4—7—1,) * தங்கையை மூக்கும் தமையனைத் தலையுந் தடிந்த வெந்தாசரதி * என்றவிடத்து வியாக்யானத்தில்—"* த்வம் மாதா ஸர்வ லோகாநாம் தேவதேவோ ஹரிஃ பிதா * என்று ஸர்வலோகத்துக்கும் மாதாவும் பிதாவுமாய்க் கொண்டிருக்கும் மிதுனத்தை முறையிலே விரும்பாமல் முறைகெடவிரும்புவார் பெறும்பேறு இது என்னுமிடம் தோற்றவே தங்கையை மூக்கும் தமையனைத் தலையும் தடிந்தது. அதாவது முக்ய விசேஷணபூதையான பிராட்டியை உபேக்ஷித்து விசேஷ்யபூதரான பெருமாளை விரும்பின சூர்ப்பணகைக்கு முக்யாங்கஹாநியே பலமாய்த்து. அவளுக்கு [பிராட்டிக்கு] விசேஷ்யபூதராய்க்கொண்டு ஸர்வர்க்கும் ப்ராணனாயிருக்கிற பெருமாளையுபேக்ஷித்து விசேஷணபூதையான பிராட்டியை விபரீதபுத்த்யா விரும்பின ராவணனுக்கு ப்ராணஹாநியே பலமாய்விட்டதென்கை. இவ்வர்த்தத்தை ப்ரகாசிப்பிக்கைக்காகவாய்த்து இவர் ‡ பலவிடங்களிலுமருளிச் செய்தது" என்றருளிச் செய்யப்பட்டுள்ளது. விபரீதத்தில் அனர்த்தமே பலிக்குமென்பதைக் காட்டுவதற்குக் கொடுத்த த்ருஷ்டாந்தத்தில் ஏதேனுமொருபடி விருப்பம் காண்பதே போதும்; அது பக்திரூபமான விருப்பமா வேறு வகையான விருப்பமா? என்கிற விசாரத்திற்கு அவஸரமில்லை. என்றிவ்வளவே இங்குச் சொல்லத்தக்கது.

---

‡ பலவிடங்களிலுமென்றது— * வல்லாளன் தோளும் வாளரக்கன் முடியும் தங்கை பொல்லாத மூக்கும் போக்குவித்தான் * என்பது முதலான பாசுரங்களை நோக்கி.

ஸ்ரீ:

# $ புதுக்கோட்டை ஸம்ஸ்தான தாநாதிகாரி (ரிடையர்ட்) வித்வன் மண்டலமண்டனம். வித்யாவாரிதி· மதத்ரயநிரூபக· ஸ்ரீமத் உ· வே. காளி. ரங்காசாரியர்ஸ்வாமிகளின் ஸ்ரீமுகம்.

**தேரழுந்தூர். 17--1—50**

ஸ்ரீமத்வேதமார்க்க ப்ரதிஷ்டாபநாசார்ய உபய வேதாந்த ப்ரவர்த்தகராய் பகவத்ராமாநுஜஸித்தாந்த நிர்த்தாரண ஸார்வபௌமராய் வித்வத் சிரோமணியாய் ப்ரதிவாதிபயங்கரகுலதிலகராய் அந்வர்த்த ப்ரதிவாதிபயங்கர பிருதபூஷிதராய் ஸகல பூர்வாசார்ய திவ்யக்ரந்த திவ்யார்த்த விசதீகரண ஸமர்த்தராய் விளங்கும் ஸ்ரீகாஞ்சீ அண்ணங்கராசார்ய ஸ்வாமியின் ஸகல ஸ்ரீஸூக்திகளையும் அம்ருதமாகப் பானம்பண்ணினவர்களில் அடியேன் ஒருவன். ஸ்ரீஸ்வாமி ஸாதித்தருளின ஸகல க்ரந்தங்களுக்குள்ளும் திவ்யப்ரபந்த திவ்யார்த்த தீபிகை முதலான ஸம்ப்ரதாய க்ரந்தங்களைப் பூர்த்தியாகப் பலதடவை ஸேவித்து மிகவும் ஸந்தோஷமடைந்துகொண்டிருக்கிறேன். எவ்வளவு புத்திச்ரமம்! எவ்வளவு த்ரவ்யச்ரமம்! எவ்வளவு தேஹச்ரமம்! மற்றும் பலவகை சிரமங்களையும் சிறிதும் பாராட்டாமல் முமுக்ஷுக்களுக்கும் மற்றவர்களுக்கும் வேண்டிய ஸகல க்ரந்தங்களையும் பண்டிதர்களும் பாமரர்களும் எளிதாகப் புரிந்துகொண்டு ஸந்தோஷ லாபமடையும்படியாக ஸ்வாமி எழுதி வெளியிட்டிருக்கிற மஹோபகாரத்திற்கு அடியேன்போல்வார் என்ன கைம்மாறு செய்யக்கூடும்? ஒன்றுமேயில்லை. ஆனாலும் ஸ்வாமிக்கு ஒருதிருநாமம் சாத்தி அந்தத்திருநாமத்தைக் கொண்டே எல்லாரும் அழைக்கும்படி செய்யவேண்டும் என்று ஆழ்வார்களும் ஆசார்யர்களும் அடியேன்மனதில் புகுந்து இதை யெழுதி உலகுக்குத் தெரிவிக்கும்படி நியமித்தபடியால் "பூர்வாசார்ய ஸமுதாயாவதாரர்" என்கிறவிருதை அடியேன் ஸ்ரீஸ்வாமிக்குச் சூட்டுகின்றேன். இனி எல்லாரும் இந்தத் திருநாமமிட்டழைத்தே ஸ்வாமியை தெண்டன் ஸமர்ப்பிக்க வேணுமென்றும் பிரார்த்திக்கிறேன்.

திவ்யப்ரபந்தங்களுக்குப் பூர்வாசார்ய வியாக்கியானங்கள் பலவிடங்களில் புரியாமலிருப்பதையும் ஐதிஹ்யங்கள் விளங்காமலிருப்பதையும் இதிஹாஸங்கள் தெரியாமலிருப்பதையும் மிகவும் ஸ்பஷ்டமாக விளக்கியும் அவரவர்களுக்கு உண்டாகக்கூடிய அனேக ஸந்தேஹங்களைப் போக்கியும் ஸ்வாமியின் திவ்யார்த்ததீபிகையுரை அமைந்திருக்குமழகு அஸூயையற்றவர்களால் மிகவும் ஸந்தோஷிக்கத் தக்கது. இப்படியே இன்னும் பூர்வாசார்ய க்ரந்தங்களையெல்லாம் விசதார்த்தங்களாக ப்ரகாசப்படுத்திக்கொண்டு நீடூழி வாழவேணும். ஸ்வாமியின் க்ரந்தங்களே பூர்வாசார்யர்களுக்கு மிகவும் உகப்பு என்பது அடியேனுடைய நம்பிக்கை.

குணங்கள் மலைமலையாக இருந்தாலும் அதுகளைக் காணமாட்டாமல் தோஷங்களையே தேடியும் கல்பித்தும் காட்டுகிறவர்கள் எக்காலத்திலும் எங்குமுண்டு. அவர்களைப் பொருள்படுத்தவேண்டிய அவசியமேயில்லை. ஸ்வாமியின் பலவிதமான க்ரந்தங்களினால் மஹோபகாரமடைகிறவர்கள்தான் இவ்வுலகில் அதிகம் என்பதை அடியேன் நன்றாக அறிவேன். அப்படிப்பட்டவர்களிடையில் சில பொறாமைக்காரர்களுமிருப்பது ஆச்சரியமல்ல. அவர்களுக்கும் பதில் சொல்லவேண்டியது அவச்யமென்று சிலர் நினைத்தாலும் அடியேனுடைய புத்தியில் அது ஈஷத்தும் அவச்யமாகத் தோன்றவில்லை. அதற்குச் செலவிடுகிற காலத்தையும் புத்திச்ரம தேஹச்ரம த்ரவ்யச்ரமாதிகளையும் இன்னமும் அத்யாவச்யக க்ரந்த நிர்மாணங்களிலும் வ்யாக்யாந ரசனைகளிலும் செலவிட்டு அஸ்மாத்ருசர்களை மேன்மேலும் ஸந்தோஷப்படுத்திக்கொண்டு வையம் மன்னி வீற்றிருக்கவேணுமென்று பகவத்பாகவத ஸந்நிதிகளிலே பிரார்த்தித்து நிற்கிறேன்.

இப்பத்திரிகை ஸ்வாமியின் ஒவ்வொரு க்ரந்தத்திலும் முகப்பில் அச்சிட்டு ப்ரசுரம் செய்யப்படவேண்டுமென்பது அடியேனுடைய ப்ரார்த்தனை.

**காளி. வங்கீபுரம். ரங்காசாரியர்.**

---

$ ஷை ரங்காசார்யஸ்வாமியின் அதிக நிர்ப்பந்தத்தினால் இந்த ஸ்ரீமுகம் இங்கு வெளியிடப் படுகிறது.

# ஸ்ரீபாஷ்யஸாரார்த்த ஸங்க்ரஹம்.

## முதலத்யாயம்—இரண்டாவது பாதத்தில்

## இரண்டாமதிகரணம்=அத்த்ரதிகரணம்.

முன்னதிகரணமாகிய ஸர்வத்ரப்ரஸித்த்யதிகரணத்தில் பரமபுருஷன் உபாஸகர்களின் சரீரத்தினுள்ளே யிருந்தாலும் கருமபலன்களையநுபவித்தலென்பது அவனுக்குக் கிடையாதென்று சொல்லப்பட்டது. அப்படியானால் கர்மபல போக்தாவாகச் சொல்லப்பட்ட வ்யக்தி பரப்ரஹ்மமாக ஆவதற்கில்லை; ஜீவனாகவே யிருக்கவேண்டியதாகும் என்று சங்கை தோன்ற, அதைப் பரிஹரிக்க இவ்வதிகரணம் ப்ரவர்த்திக்கிறது.

ஸூ. अत्ता चराचरग्रहणात् ॥ அத்தா சராசரக்ரஹணாத். 1-2-9.

அத்தா—போக்தாவென்று ஓதப்பட்டவன், (ஸ:)—அந்த பரமபுருஷனேயாவன்; ஏதனாலென்னில்; சராசரக்ரஹணாத்—சேதநாசேதநாத்மகமான ஸகலப்ரபஞ்சமும் அந்த பரமபுருஷனுக்கு போஜ்யவஸ்துவாக ச்ருதியில் க்ரஹிக்கப்படுகையாலே. என்பது ஸூத்ரத்தின் பொருள்.

கடவல்லியில் இரண்டாவது வல்லியில் * यस्य ब्रह्म च क्षत्रं च उभे भवत ओदनः मृत्युर्यस्योपसेचनं क इत्था वेद यत्र सः—யஸ்ய ப்ரஹ்ம ச க்ஷத்ரஞ்ச உபே பவத ஓதந:, ம்ருத்யுர் யஸ்யோபஸேசநம் க இத்தா வேத யத்ர ஸ: * என்கிற மந்த்ரம் ஓதப்பட்டுள்ளது. அதில் யச்சப்தத்தினால் நிர்தேசிக்கப்பட்ட வொருபுருஷனுக்கு ப்ராஹ்மணவர்ணமும் க்ஷத்ரிய வர்ணமும் அன்னமாகிறதென்று சொல்லி ம்ருத்யு என்பவன் அந்த உணவுக்கு ஊறுகாயாகிற தாகவும் சொல்லிற்று. யாதொன்று மற்றவற்றையுண்பதற்குக் கருவியாயிருந்து தானும் உண்ணப்பட்டு முடிகிறதோ அதனை ஊறுகாயென்பது உலகவழக்கு. ஒரு மாங்காயை யெடுத்துக்கொள்வோம்; இது தயிர்ச்சோற்றையுண்பதற்கு ஸாதனமாயிருந்து முடிவில் தானும் உண்ணப்படுவதாகவுள்ளதன்றோ. இது தான் ஊறுகாயின் லக்ஷணம். ப்ரக்ருதத்தில், ப்ராஹ்மணக்ஷத்ரியர்களையுண்பதில் ம்ருத்யு உபஸேசநம் [ஊறுகாய்] என்று சொல்லுகையாலே, ம்ருத்யுவானவன் இதரவஸ்துக்களையுண்பதற்கு ஸாதனமாயிருந்து தானும் முடிவில் உண்ணப்படுவதாக விளங்குகிறது. ம்ருத்யுவானவன் உண்ணப்படுகிறானென்றால் இது ஸம்பவிக்கமாட்டாது. ஸம்ஹரிக்கப்படுகிறானென்பதே அதன் பொருள் எனக. இதர வஸ்துக்களை யுண்பதற்கு ஸாதனமாயிருக்கை யென்றதும் ஸம்ஹார ஸாதநத்வமென்ற தாகவே கொள்ளவேண்டும். ம்ருத்யுவுக்கு ஸகலசராசரப்ராணி ஸமுதாயத்தினுடையவும் ஸம்ஹாரத்தில் ஸாதனமாகையன்றி, ப்ராஹ்மணக்ஷத்ரிய மாத்ர ஸம்ஹாரத்தில் ஸாதனமாகை யில்லை. ஆகவே எந்த புருஷனாலே ஸம்ஹாரஸாதனமான ம்ருத்யுவைக்கொண்டு ஸகல சராசரமும் ஸம்ஹரிக்கப்படுகிறதோ, அந்த ம்ருத்யுவும் ஸம்ஹரிக்கப்படுகிறானோ, அந்த புருஷன் யாதொரு ப்ரகாரத்திலிராநின்றானோ, அந்த ப்ரகாரத்தை [அப்பெருமையை] யாரறிவார்? ஒருவருமிலர் என்பதாகப் பொருள் தேறிற்று.

இங்கு யச்சப்தத்தாலே நிர்தேசிக்கப்பட்ட புருஷனை *ருதம் பிபந்தௌ* என்கிற அடுத்த மந்த்ரத்தில் ப்ரஸ்தாவித்து, அவன் எளிதாக உபாஸிக்கக்கூடியவன் என்பது தெரிவதற்காக உபாஸகனை ஜீவனோடு கூட ஒரே ஹ்ருதயகுஹையில் அவன் ஸந்நிஹிதனாயிருப்பதாகச்சொல்லி, உபாஸநத்திற்குப் பலனான ப்ராப்யவஸ்துப்ராப்திக்கு உபகரணமாக உபாஸகனை ரதி (रथि)யாகவும் அவனுடைய சரீரம் முதலானவற்றைத் தேர் முதலியன வாகவும் பரிகல்பநம்பண்ணி அப்படிப்பட்ட உபகரணத்தைக்கொண்டு ப்ராப்தவ்யமான வஸ்

துவை உபதேசிக்கிற பிரகரணத்தில் * सोऽध्वनः पारमाप्नोति तद्विष्णोः परमं पदम्——ஸோத்வநः பாரமாப்னோதி தத் விஷ்ணோः பரமம் பதம் * என்று முன் சொன்ன ரதம் முதலிய வுபகரணங்களையுடையவன் விஷ்ணுவினுடைய பரமமான பதத்தை யடைகிறானென்று விஷ்ணுவை ப்ராப்யனாகச் சொல்லியிருக்கையாலே * யஸ்ய ப்ரஹ்ம ச க்ஷத்ரஞ்ச * என்கிற மந்த்ரத்தில் யச்சப்தத்தால் நிர்தேசிக்கப்பட்ட ஸம்ஹாரகர்த்தாவானவன் பரமபுருஷனே யென்று நிச்சயிக்கப்படுகிறது.

இங்குப் பூர்வபக்ஷம் ;—* யஸ்ய ப்ரஹ்ம ச க்ஷத்ரஞ் ச * என்னும் மந்த்ரத்தில் ப்ராஹ்மணக்ஷத்ரியாதி ஜாதீயர்களான ஸ்த்ரீபுமான்கள் பரஸ்பரம் போக்யபூதர்களென்று ஏற்படுகிறது. அதனால் யச்சப்தத்தினால் நிர்தேசிக்கப்படுகிற போக்தா ஜீவாத்மாவாகவேயிருக்கத் தக்கவனென்று தெரிகிறது ; கருமத்தின் பலனான ஸ்த்ரீபோகம் முதலானவை ஜீவனுக்கே ஸம்பவிக்குமாதலால். * ம்ருத்யுர் யஸ்ய உபஸேசநம் * என்று சொல்லியிருப்பதானது—ம்ருத்யுவானவன் ஜீவாத்மஸ்வரூபத்தைக் குறித்து பாதகனல்லன் என்றிவ்வளவு தெரிவிப்பதிலேயே நோக்குடையது. ஆகவே ஜீவன்தான் அந்த மந்த்ரத்தில் பிரதிபாதிக்கப்படுபவன்—என்று.

இதற்கு மேல் ஸித்தாந்தம் வருமாறு:—* ம்ருத்யுர் யஸ்யோபஸேசநம் * என்பதில் சொல்லப்பட்ட உபஸேசநத்வம் அபாதகத்வரூபம் என்று கொள்வதில் மிகவும் அஸ்வாரஸ்யமுள்ளதனால், லோகப்ரஸித்திக்கிணங்க யாதொன்று மற்றவற்றையுண்பதற்குக் கருவியாயிருந்து தானும் உண்ணப்பட்டு முடிகிறதோ அது தான் 'உபஸேசநம்' என்று ஸ்வரஸமான பொருளே கொள்ளவேண்டுகையாலே, கீழே விவரித்தபடி ம்ருத்யு ஸம்ஹாரஸாதனமாயும் ஸம்ஹரிக்கப்படுபவனாயுமிருக்கையே உபஸேசநமென்பதற்குப் பொருத்தமான பொருள் ; போக்யத்வமென்பது இங்குப் பொருளாக வழியில்லை. ஆகவே கருமபலன்களை யநுபவிப்பவனான ஜீவனுக்கு இங்குப் ப்ரஸக்தியேயில்லை.

அத்த்ரதிகரணம் முற்றிற்று.

# 14. அந்தராதிகரணம். 3.

முன்னதிகரணத்தில் * க இத்தா வேத யத்ர ஸः * என்பதனாலே பரமாத்மா தெரிந்துகொள்ளமுடியாதவனெனப்பட்டது. அப்படியானால், தெரிந்துகொள்ளக்கூடியவனென்று சொல்லப்பட்டவன் பரமாத்மாவாக இருக்கமுடியாதே யென்கிற சங்கையைப் பரிஹரிக்க இவ்வதிகரணம் தோன்றுகின்றது.

* सू. अन्तर उपपत्तेः ||அந்தர உபபத்தேः. 1—2—13.

அந்தரः—கண்களினுள்ளே யிருப்பவன், (ஸः)—அந்த பரமபுருஷனே ; உபபத்தேः—அங்குச் சொல்லப்பட்டிருக்கிற அபயத்வம் அம்ருதத்வம் முதலானவை அப்பரமபுருஷனிடத்திலேயே பொருந்தக்கூடியவையாதலால். என்பது ஸூத்ரத்தின் பொருள்.

சாந்தோக்யோபநிஷத்தில் உபகோஸலவித்யாபிரகரணத்தில் * य एषोऽक्षिणि पुरुषो दृश्यते, एष आत्मेति होवाच, एतदमृतम् एतदभयम् एतद्ब्रह्म——ய ஏஷோக்ஷிணி புருஷோ த்ருச்யதே, ஏஷ ஆத்மேதி ஹோவாச, ஏததம்ருதம் ஏததபயம் ஏதத் ப்ரஹ்ம * என்று ஓதப்பட்டுள்ளது. அங்கு * அக்ஷிணி புருஷோ த்ருச்யதே* என்பதனால் கண்ணினுள்ளவனாக ஒரு புருஷன் ஏற்படுகிறான். அந்தர்யாமி ப்ராஹ்மணத்தில் * यश्चक्षुषि तिष्ठन् चक्षुषोऽन्तरः :——யச் சக்ஷுஷி திஷ்டந் சக்ஷுஷோந்தரः* என்ற வாக்யத்தினால் கண்ணினுள்ளவனாகவும் நியாமகனாகவும் ஓதப்பட்ட பரமபுருஷன் அந்த * ய ஏஷः* இத்யாதிவாக்யத்தினால் நினைப்பூட்டப் படுகிறான். ஆகவே அக்ஷிபுருஷன் பரமபுருஷனாகவே யிருக்கத்தக்கவன்.

(தொடரும்.)

(மூவா=மாதவனைக் கேசவனை) * அலைகடல் கடைந்ததனுள் கண்ணுதல் நஞ்சுண்ணக் கண்டவனே, விண்ணவரமுதுண அமுதில்வரும் பெண்ணமுதுண்ட வெம்பெருமானே * என்கிறபடியே தான் ஸாக்ஷாதம்ருதத்தையுண்டு ப்ரஹ்மாதிகளுக்குக் கோதைக்கொடுத்தான் என்று பட்டரருளிச் செய்வர்.

(மூவா=எங்கும் திருவருள் பெற்று இன்புறுவர்) விடிவோறே யெழுந்திருந்து முப்பது பாட்டையும் அநுஸந்தித்தல், மாட்டிற்றிலனாகில் * சிற்றஞ்சிறுகாலே யென்கிற பாட்டையநுஸந்தித்தல், அதுவும் மாட்டிற்றிலனாகில் நாமிருந்த விருப்பை நினைப்பது—என்று பட்டர் அருளிச் செய்வர்.

ஐதிஹ்ய நிர்வாஹ ரத்னமாலையில்

**திருப்பாவை வியாக்கியான ஸங்க்ரஹம்**

முற்றிற்று.

---

# நாச்சியார் திருமொழி.

---

### கோழியழைப்பதன்—9. கஞ்சன்வலைவைத்த.

(காரிருளெல்லில் பிழைத்து.)....பிள்ளையுறங்காவில்விதாஸர்— இவன் தான் பருவம் நிரம்பாமையாலே தன்னை நோக்கிக்கொள்ள மாட்டிற்றிலன்; புறம்பு தானே பரிந்து நோக்குகைக்கு ஒருத்தரில்லை. கம்ஸாதிகள் தப்பாமல் அகப்படுத்தக் கோலி நின்றார்கள்; அவ்வளவில் உதவித்தந்தது இருள், அத்தைச் சரணம்புகுமத்தனையிறே—என்று பணிப்பராம்.

### தெள்ளியார் பலர். முதற்பாட்டு.

(மணாளனார் பள்ளி கொள்ளுமிடத்து) பள்ளிகொள்ளுமிடமாகிறது கோயில் என்று பட்டரருளிச் செய்ய நான் கேட்டேன் என்று பிள்ளையழகியமணவாளரரையர் பணிப்பர்.

### தெள்ளியார் பலர் 9. கொண்ட கோலக்குறள்.

(அண்டமும் நிலனுமடியொன்றினால்) "* த்ரீணி பதா விசக்ரமே (த்ரீணி பதா விசக்ரமே) என்றும், * மூன்றடிநிமிர்த்து என்றும் உண்டாயிராநின்றது. இதிருக்கிறபடியென்?" என்று பட்டரைக் கேட்க; * வஸோர்ஹ்ருதயா தநு வா வ்யயாந; நதே உஹி ஸுசநம்வஞ்சி। உஷெ தெவி ரஜஸீ வ்யவிவ்ர்தாவிஷெர்ஷெவக்ஷம் வாசஹவ்ருவிஷ்ணோ* என்று, வேத புருஷன்தானே இரண்டடியாலளந்தவிடம் எல்லாருமறியும், நீ மூன்றடியாலளந்தவிடம் உனக்கே தெரியுமத்தனையென்று வேதபுருஷனும் காணமல்விட்டான்; அவன் அளந்தமையுண்டு; அவனுக்கே தெரியுமத்தனை என்றருளிச் செய்தாரென்று ஜீயரருளிச் செய்வர்.

ஐ—5

## தெள்ளியார் 11. ஊடல் கூடல்.

(நீடுநின்ற நிறைபுகழாச்சியர்)....நிறை புகழாச்சியர் என்கிறதுக்கு எம்பார், இவர்களுக்கு நிறைபுகழாவது க்ருஷ்ணனை இன்னாள் நாலுபட்டினி கொண்டாள்' இன்னாள் பத்துப்பட்டினி கொண்டாள் என்னும் புகழ்காணும் என்றருளிச் செய்வர்.

(விவரணம்.) * கூர்மழைபோல் பனிக்கூதலெய்திக் கூசிநடுங்கி யெமுனையாற்றில் வார்மணற்குன்றில் புலரநின்றேன் வாசுதேவாவுன் வரவு பார்த்தே * என்கிறபடியே கண்ணபிரானுடைய வரவை எதிர்பார்த்திருப்பர்கள் பல மாதர். இவன் இப்படி பல் மாதர்கள் தன்னை யெதிர்பார்த்திருக்கும்படி செய்துவிட்டுத் தன் மனத்துக்கினியாளான வொருத்தியோடே கலந்திருந்து போதுபோக்குவன்; அப்போது எதிர்பார்த்திருந்த மற்றை மாதர்கள் * இன்னமென்கையகத் தீங்கொருநாள் வருதியேல் என் சினம் தீர்வன் நானே * என்றபடி இனி அந்தக் கண்ணபிரான் இங்கேற வருவானாகில் முகங்கொடுத்து ஒரு வார்த்தையுஞ் சொல்லக் கடவோமல்லோமென்று ஸங்கல்பஞ் செய்துகொண்டு அளவற்ற ரோஷத்துடனிருப்பர்கள். பிறகு தனக்கு ஒழிந்தபோது ஒரு நாள் கண்ணபிரான் அளவிறந்த அன்பு பூண்டவன்போல ஆடிப்பாடிக்கொண்டு அவர்கள் முன்னே வந்து நிற்பன். அப்போது அவர்கள் தாங்கள் முன்பு செய்துகொண்ட ஸங்கல்பத்தின்படியே முகங் கொடாமலேயிருப்பர்கள். அப்போது இவன் கண்ணீர் விட்டழுவதும் காலில் கும்பிடுவதுமாய் ஊணுமுறக்கமுமில்லாமல் பலநாட்களளவும் அவர்களது வீட்டைவிட்டுப் பெயராதே இடைகழித்திண்ணையிலே கிடந்து படுவன். இப்படி நாலுநாள் பட்டினிகிடந்த பிறகு ஒருத்திமனமிரங்கி முகங்கொடுப்பள். மற்றொருத்தி அவ்வளவிலும் மறம் மாறாதே இவன் எட்டு நாள் பட்டினி கிடந்த பின்பு முகங்கொடுப்பள்......இப்படி பலபல நாள் பட்டினிகிடந்தாகிலும் அவ்வாய்ச்சிகள் பக்கலிலே இவன் முகம்பெற நினைப்பது அவர்களிடத்துள்ள தேஹகுணம் ஆத்மகுணம் முதலியவற்றாலான வைலக்ஷண்யத்தைப்பற்றியாம். இதனால் அவர்களது புகழ் வீறுபெறுமாயிற்று.

## நாச்சியார் திருமொழி—மன்னுபெரும்புகழ்—5. மென்னடையன்னம்.

(வில்லிபுத்தூருறைவான்தன் இத்யாதி.) வைகுந்தனென்பதோர் தோணிபெறுதுழல்கின்றேனென்கை ப்ராப்தம்—அதிதூரஸ்தமாகையாலே. தனக்காக வந்து நிற்கிறவிடத்திலே காணப்பெறாதே நோவுபட்டுக் கண்ணுறங்காதேயிருந்தாளென்றால் இது சேரும்படியெங்ஙனே யென்று நான் ஜீயரைக் கேட்டேன்; உள்ளுப்புக்கால் குறியழியாமே நம்மைப்போலே போரவல்லவளல்லள், ஸ்ரீ பரதாழ்வானைப்போலே மோஹிப்பாளொருத்தியாய்த்து; உள்ளே கொடுபுகில், அந்த சில குணத்தைக் கண்டவாறே இவள் மோஹித்துக் கிடக்கும்; பின்னை இவளை யிழக்கவொண்ணாதென்று கொண்டுபுக்கார்களில்லைபோலே காணும் என்றருளிச் செய்தாரென்று அருளிச்செய்வர்.

(விவரணம்.) இது, நஞ்சீயரிடம் கேட்டதாக நம்பிள்ளையருளிச் செய்வரென்றபடி. இங்குக் கேள்வியென்ன? ஸமாதானமென்ன? என்னில்; கீழ்ப்பாட்டில் * வைகுந்தனென்பதோர் தோணி பெறாதுழல்கின்றே னென்றது பொருந்தும்; ஸ்ரீவைகுண்டம் ஆண்டாளுக்கு எட்டாத நிலமாகையாலே அவ்வைகுந்தனைப் பெறுவதற்கு இயலாமல் வருந்துவதாகக் கூறினது தகும். இப்பாட்டிலோவென்றால் * வில்லிபுத்தூருறைவான்றன் பொன்னடி காண்பதோராசையினால் என்கிறாள்; அவ்வூரிலேயே பிறந்து வளருமவளான இவளுக்கு அப்பெருமானுடைய பொன்னடியைக் காண்பதில் என்ன அருமை? காதமா

இருகாதமா? நாலடியளவிலேயிருக்கின்ற வடபெருங்கோயிலுடையானது ஸன்னிதிக்குள்ளே நினைத்தபோதெல்லாம் போய்ப்புகுந்து கண்டுவரலாமன்றோ; ஆயிருக்க, ஸ்ரீவில்லிபுத்தூரெம்பெருமானுடைய திருவடிகளை ஸேவிக்கப் பெறாமல் என் கண்கள் விடாய்த்துப் போயினவென்று இவள் சொல்லுவது எப்படிபொருந்துமென்று நஞ்சீயர் ஸந்நிதியிலே நம்பிள்ளையின் வினா. அதற்கு ஜீயருடைய விடையாவது—' நீர் கேட்டது அழகியதே; ஆண்டாள் ஸ்ரீ வில்லிபுத்தூரிலேயே பிறந்து வளருமவளாயினும் வடபெருங்கோயிலுடையானது ஸன்னிதியிலே சென்றுபுகுவது அவளுக்கு எளிதாகக் கைகூடுமதன்று; நாமெல்லாம் கோவிலுக்குள்ளே போய்வந்தால் சித்தவிகாரமென்பது சிறிதுமில்லாமல், கல்போலவே பொய்க் கேல்போலவே திரும்பிவருகிறோம்; ஆண்டாளுடைய ப்ரக்ருதி அப்படிப்பட்டதல்ல காணும்; உள்ளே புகுந்தவாறே அப்பெருமானுடைய சீலகுணத்தை அநுஸந்தித்து அதிலே ஆழங்காற்பட்டுப் பரதாழ்வானைப்போலே மோஹிப்பவளாயிற்று. இப்படிப்பட்ட ப்ரக்ருதியைத் தெரிந்துகொண்டிருக்கும் இவளுடைய உறவினர் இவளைக் கோவில்வழிநாடவொட்டார்கள். *குழையும் வாண்முகத்தேழையைத் துலைவில்லி மங்கலம் கொண்டு புக்கு இழைகொள் சோதிச் செந்தாமரைக் கட்பிரானிருந்தமை காட்டினீர்* (திருவாய்மொழி 6—5—5.) என்ற பாசுரத்தை இங்கே நினைப்பது. 'இவளைக் கோவிலுக்கு அழைத்துக் கொண்டு போய்ப் பெருமாளை ஸேவிக்கச் செய்து அதனால் சித்தவிகாரமுமடையும்படி செய்து 'அநியாயமாகக் குழந்தையைக் கோவிலுக்கு அழைத்துக்கொண்டுபோய் வலையிலகப்படுத்தி இழந்தீர்களே' என்று நாலு பேர் வசை கூறும்படியாவதிற்காட்டிலும் இவளைக் கோவில் வழி நோக்கவொட்டாமற் செய்வதே நன்றென்று நினைத்துத் தாய்தந்தையர் இவளை அகத்தினுள்ளேயே அடக்கிவைத்திருப்பர்களாகையாலே *வில்லிபுத்தூருறைவான்றன் பொன்னடி காண்பதோராசையினாலென் பொருகயல்கண்ணிணை துஞ்சா என்று கூறினது பொருத்தமுடைத்தே—என்று.

## நாச்சியார்—மன்னுபெரும்புகழ்—6 எத்திசையும்.

(என்தத்துவனை) ராவணன் மாயாசிரஸ்ஸைக் காட்டினபோது 'ஸார்வபௌமனாயிருப்பானொருவன் கைப்பிடிக்கக்கடவன் என்றாப்போலே ஜ்யோதிர்வித்துக்கள் சொன்னவையும் பலிக்கக் கண்டிலேன்' என்று இங்ஙனே சிலவற்றைச் சொல்லி இக்காலத்தில் ஸ்த்ரீகள் பொய்யே கண்ணநீரைவிட்டிருக்குமாபோலே விட்டிருந்து இவளும் தரித்திருக்கைக்கு அடியென்? என்று நான் ஜீயரைக் கேட்க; ஜ்ஞாநமன்று இவள் ஜீவநத்துக்கு ஹேது; பெருமாள் ஸத்தையாய்த்து; அவர் உளராகையாலே இருந்தாள் காணும் என்றருளிச் செய்தார்.

(விவரணம்.) இது, பெரியவாச்சான்பிள்ளைக்கும் நஞ்சீயர்க்கும் நடந்த ஸம்வாதமென்று தோன்றுகிறது. நம்பிள்ளைக்கும் நஞ்சீயர்க்கும் நடந்த ஸம்வாதமென்று கொண்டாலும் குறையில்லை. இங்குக் கேள்வி யென்ன? விடையென்ன? என்னில்; மாயாவியான ராவணன் இராமன் தலையறுப்புண்டு தொலைந்தானென்று தோற்றும்படி ஒரு மாயாசிரஸ்ஸைக் கொண்டுவந்து பிராட்டிக்குக் காட்டி 'இதோபார் ஸீதே! உன் கணவன் தலையறுப்புண்டொழிந்தான்' என்று பொய்சொன்னபோது, இக்காலத்துப் பெண்டிர் தமது பர்த்தாக்களின் மரணத்திலே சற்றுக் கண்ணநீரைப் பெருகவிட்டுக்கிடப்பதுபோல் பிராட்டியும் துக்கப்படுவதுபோல் சிறிது துக்கப்பட்டு உயிர் தரித்திருந்தாளேயொழிய, பிராணன் படுக்கென்றுபட்டுப் போகப் பெற்றிலளே; மெய்யான அன்பு இருக்குமாகில் அந்த ஸமயத்திலுங்கூடவா உயிர்தொலையாதிருக்கும்? பிராணநாதன் உயிரொழிந்தா

னென்று மாயாசிஸ்ஸைக் கண்டு மெய்யாக நம்பித்தானே துயருற்றாள்; நம்பவில்லையென்றால் துயருற அவசியமில்லை; துயருறுகையாலே நம்பினாளென்று நிச்சயிக்கவேண்டிற்று. அப்போது உயிர்தரித்திருந்து அழுதாளென்று ஸ்ரீராமாயணத்தில் சொல்லிற்றே; அவள் இராமபிரானிடத்து வைத்திருந்த பிரணயத்திற்கும் இப்படியழுததற்கும் சேர்த்தியில்லை போலிருக்கிறதே யென்று வினா; இதற்கு விடையாவது;—நாயகன் உயிரோடிருக்கிறானென்று நினைத்துக் கொள்வதும் உயிரிழந்துவிட்டானென்று நினைத்துக்கொள்வதும் உபயோகமற்றது. மானிடர்க்கு மருள் ஸம்பாவிதமாகையாலே உள்ளதை இல்லாததாகவும் இல்லாததை உள்ளதாகவும் மருளக்கூடும். அந்த மருளினால் விபரீதம் எதுவும் நேர்ந்திடாது. உண்மையில் நாயகன் ஜீவித்திருந்தானாகில் அந்த ஸத்தையே காரணமாக நாயகியின் ஸத்தையும் குறையற்றதாகும். நாதனது ஸத்தையில் குறையில்லாதிருக்க, உண்மைக்கு மாறாக ஒருவர் ஸத்தையில்லையாகப் பொய் சொன்னால், அதனை நம்ப நேர்ந்தாலும் துக்கமுண்டாகு மத்தனையல்லது ப்ராணலோபமுண்டாகாது. உத்தமநாயக நாயகிகளின் உயிர்களானவை * ஆக்க்யாதி ஹ்ருதயம் ஹ்ருதா * என்றபடி பரஸ்பரம் தம் தம் ஸத்தையைத் தெரிவித்துக் கொள்ளும். ப்ரக்ருதத்தில், ராவணன் மாயாசிரஸ்ஸை வஞ்சனையாகக் காட்டினாலும், பிராட்டி அதனை நம்பினாலும், உண்மையில் பெருமாளுடைய ஸத்தைக்குக் குறையில்லாமையாலே பிராட்டியும் ஸத்தைகுலையாதிருந்தாள்—என்று. இவ்விஷயத்திற்கு இங்கு ப்ரஸக்தி என்னென்னில்; மூலத்தில் ‘என்தத்துவனை’ என்றுள்ளதற்கு இது பொருத்தமான ஸம்வாதமாகும். குயிலானது ஆண்டாளை நோக்கி ‘இருடீகேசனை இங்கு வருமாறு கூவச் சொல்லுகிறாய் நீ; அவன் உன்னோடு சேர்ந்திருந்த காலத்தில் ‘பிரியேன், பிரியில் பிழையேன்!’ என்று சொன்னதை நான் கேட்டிருக்கிறேன்; உனக்கும் அது ஞாபகமிருக்குமே; ஆகவே உன்னைப் பிரிந்துபோய் இன்னும் வந்து சேராதிருக்கிற அவன் பிழைத்திருப்பனென்று எனக்குத் தோன்றவில்லையே; அன்னவனை நான் கூவிப் பயனென்?’ என்றதாகக் கொண்டு, அதற்கு ஆண்டாள் ‘குயிலே! அங்ஙனன்றுகாண்; நான் ஸத்தை கெடாமல் இருக்கின்றமையால் காதலனும் அப்படியே ஸத்தை கெடாதிருப்பனென்று நினை; அவனது ஸத்தைக்கு ஹாநி விளைந்திருக்குமாகில் எனது ஸத்தையும் குலைந்திருக்குமன்றோ; அவன் என்னுடைய தத்துவன் காண்; ஆதலால் அவனுடைய ஸத்தையை நிச்சயித்துக்கொள் என்கிறாளென்க. ஆகவே, என்தத்துவன் என்றது—என்னுடைய ஸத்தைக்கு ஹேதுவானவன் என்றபடி.

அதிலேயே மேலே, (தலையல்லால் கைம்மாறிலேனே) பெற்றி, கிழக்குக்குப்போனவிடத்திலே இதுக்குப் பொருளென்? என்று என்னைச் சிலர் கேட்டார்கள்; ‘நீ இவன் வரும்படி கூவவல்லையாகில் உனக்கு ப்ரத்யுபகாரமாக என் தலையைத் தருமத்தனையிறே என்று சொல்லுகிறாள்’ என்று சொன்னேன்; இவ்வளவாகமாட்டாது இதுக்குப் பொருள் என்றிருந்தேன்; இவ்விடத்துக்கு ஜீயரருளிச் செய்யும்படி என்? என்று கேட்டார்; நீ பண்ணின வுபகாரத்துக்கு இத்தலையால் செய்வதொன்றுண்டோ வென்று என் தலையை உனக்காக்கிக் காலமெல்லாம் உன் காலிலே வணங்கி வர்த்திக்குமத்தனை யென்கிறாள் என்றருளிச் செய்வர்—என்றேன். போரக் கொண்டாடியருளி ‘நான் பதினொரு திருவாய்மொழிகேட்டேன்; திருமொழி கேட்கப்பெற்றிலேன்; போன விடங்களிலே என்னைச் சிலர்கேட்டால் அருளிச்செய்யுமதுவே எனக்குத் தோற்றி நானும் சொல்லும்படி ப்ரஸாதிக்கவேணும் என்று வேண்டிக்கொண்டேன்; அவரும் அப்படி ப்ரஸாதித்தருளினார்; ஒரு வரலாபத்தாலே இவை அறியப்போகாது, ச்ரவணங் கொண்டறியவேணும் என்றருளிச் செய்தார்—என்றருளிச் செய்வர்.



ஸ்ரீமான் உ.வே. வித்வான்.
அகரம். வீரவல்லி.
நரஸிம்ஹாசாரியர் ஸ்வாமி.
(திருவல்லிக்கேணி)



ஸ்ரீமான் உவே. கிடாம்பி.
தெய்வசிகாமணி ஐயங்கார் ஸ்வாமி
நாச்சியார் திருமாளிகை.



ஸ்ரீமான் உவே. ஸ்தானீகம்
தங்கமையங்கார் ஸ்வாமி.
திருக்கோட்டியூர்.

பிறகு தன்னிருப்பிடம் வந்து சேர்ந்த இராமன் இச்செய்தியைத் தனது தாய்க்குத் தெரிவித்தற் பொருட்டுக் கௌஸல்யை யிருக்குமிடம் சார்ந்தனன். ஏற்கெனவே அவள் இச் செய்தியை அறிந்தவளாதலால் இம்மங்கலம் இடையூறின்றி நிறைவேறுதற் பொருட்டு இஷ்ட தேவதையை வழிபாடு செய்துகொண்டிருக்கக் கண்டனன். சுமித்திரையும் செய்தியறிந்து பெருமகிழ்ச்சியுடன் அவ்விடம் வந்திருந்தனள். லக்ஷ்மணனும் அங்கு வந்து சேர்ந்தனன். வேலைக்காரிகளால் அழைத்துவரப்பட்டு ஸீதையும் அங்குவந்து சேர்ந்தனள். அப்போது நியமத்தில் ஊன்றியிருந்த கௌஸல்யையை இராமபிரான் வணங்கித் தந்தையின் கட்டளையைத் தான் பெற்றமையை விஜ்ஞாபித்து, முடிபுனைதற்கு முன்னங்கமாக ஸீதைக்கும் தனக்கும் நடைபெறவேண்டிய மங்கலகாரியங்களை முறைப்படி நடப்பிக்குமாறு தாயை வேண்டிக் கொண்டனன். கௌஸல்யையும் அதுகேட்டுப் பரமானந்தம் பொங்கி இராமனைப் பலவாறு வாழ்த்தினள். பிறகு இராமன் தம்பியாகிய லக்ஷ்மணனையும் இனிய மொழிகளாலே மிகவுகப்பித்துத் தாய்மார்களிடம் விடைபெற்றுக் கொண்டு ஸீதையை யழைத்துக் கொண்டு தன் மாளிகையிற் சென்று சார்ந்து விரதங்களில் ஊக்கங் கொண்டிருந்தனன்.

### தசரதனது கட்டளையின்படி வஸிஷ்டமுனிவர் இராமனிடம் வந்து உபவாஸமிருக்குமாறு நியமித்து மீளுதல்.

மாறுநாட் காலையில் தசரதமன்னவனால் மிகுந்த ஊக்கமும் விரைவும் கொள்விக்கப் பெற்ற வஸிஷ்ட முனிவர் இராமனிடம் நேரில் வந்து 'தந்தையிட்ட கட்டளையின்படி ஸீதையுடன் விரதத்தைக் குறைவின்றி அனுட்டிப்பாயாக' என்று சொல்லி மீண்டனர். நடக்கப் போகின்ற இம்மஹோத்ஸவத்தை யனுபவிக்கும் பொருட்டுப் பலபல விடங்களினின்றும் வந்து குழுமிக் கொண்டிருக்கின்ற மஹாஜனங்களின் கோலாஹலங்களை முனிவர் ராஜ மார்க்கங்களிற் கண்டு பெருங்களிப்புக் கொண்டனர். அயோத்திமா நகர் முழுவதும் ஸந்தோஷமே வடிவெடுத்த ஜனங்கள் நிரம்பப் பெற்றதும் பலவகை விசித்திர அலங்காரங்கள் செய்யப் பெற்றதுமாய் மிக அற்புதமாக விளங்கிற்று. முனிவரும் மன்னவன்பாற் சென்று சேர்ந்து, தாம் இராமனிடம் போய்க் கட்டளையிட்டு வந்த செய்தியைத் தெரிவிக்க, மன்னர் பெருமான் அந்தப்புரத்திற் புகுந்தனன்.

### இராமன் விரதங்களனுட்டித்தலும் எங்குமலங்காரங்கள் செய்து குதூகலம் கொண்டிருத்தலும்.

வஸிஷ்ட முனிவர் தன்னிடம் வந்து நியமித்து மீண்ட பின் இராமன் நியமங்களில் தவறாது நின்று ஸீதையுடனே கூடி ஸ்ரீமந்நாராயணனை வழிபாடு செய்தனன். அக்னியில் ஹோமங்களைச் செய்தனன். உபவாஸத்துடனும் மௌன விரதத்துடனும் தேவாலயத்தில் தர்ப்ப சயனத்தின் மீது ஸீதையுந்தானுமாய்ப் படுத்திருந்து அன்றிரவைக் கழித்தனன். உதய காலத்தில் எழுந்து காலைக் கடன்களை முடித்து அந்தணர்களை வரவழைத்துப் புண்யாஹ வாசனம் செய்விக்கையில், வேதவொலியும் விழாவொலியும் எங்கும் பரம்பி நகரமடங்கலும் நன் மகிழ்ச்சி நனிமல்கப் பெற்றது. நகரவீதிகளும் ஒவ்வொருவருடைய வீடுகளும் விசித்திரமான அலங்காரங்கள் கொண்டன. எங்கும் மகுடாபிஷேகப் பேச்சாகவே யிருந்தது. வீட்டுவாசல்களில் திரள் திரளாக விளையாடிக் கொண்டிருக்கும் சிறுவர்களும் ஒருவர்க்கொருவர் ராமாபிஷேகத்தைப்பற்றிய வார்த்தைகளையே பேசிக்கொண்டிருந்தனர். ஒவ்வொருவரும் கொண்டிருந்த குதூகலமும் அதனால் செய்த காரியங்களும் வருணிக்க முடியாதவை. இராமபிரானது திருக்குணங்களையே வாய்வெருவிக் கொண்டும் தசரத மன்னவனை வாழ்த்திக் கொண்டும் யாரும் மிக்க மனக்களிப்போடிருந்தனர்.

## ராம மகுடாபிஷேக முயற்சியை யுணர்ந்த மந்தரை கைகேயியிடம் சென்று செய்தி கூறுதலும், அது கேட்ட கைகேயி மிக்க மகிழ்ச்சியுடன் மந்தரைக்குப் பரிசளித்தலும்.

அயோத்திமா நகரிற் பிறவாமல் எங்கேயோ பிறந்து வந்து சேர்ந்தவளும் கைகேயியின் பந்துக்களுக்குத் தாதியாயிருந்தவளுமான மந்தரை யென்பவள் உப்பரிகையின் மீது தற்செயலாக ஏறி அந்நகர் முழுவதையும் கண்ணுற்றாள். எங்குப் பார்த்தாலும் அலங்கார மயமாகவும் வேதவொலி மயமாகவும் விழாவொலிமயமாகவும் இருக்கின்ற அதிசயத்தை அபூருவமாகக் கண்டாள். அளவுகடந்த ஆச்சரியமடைந்தாள். அப்பொழுது இராமனது செவிலித்தாயாகிய ஒரு பெண்மணியும் அவ்வுபரிகையின்மீது தன்னருகில் மிக்க அலங்காரங்கள் பொருந்தியிருப்பதைக் கண்ட அந்த மந்தரையானவள் அவளை நோக்கி "ஊரடங்கலும் இவ்வளவு விபவங்கள் விஞ்சியிருப்பதற்கு யாது காரணம்? அதிகமாகக் கொடை புரிந்தறியாத கௌஸல்யையும் இன்று விசேஷமாகத் தானதருமங்கள் செய்கின்றாளே, இதற்கு யாது காரணம்? தசரதமன்னவன் ஏதேனும் மகிழ்ச்சி விஞ்சிய காரியம் நடத்த உத்தேசித்திருக்கின்றனனோ? இதை எனக்குரைக்கவேணும்" என்றாள். அதற்கு அவள் உண்மையான செய்தியை இவளிடம் சொல்லலாகாதென்பதை யறியாது இராமனுக்கு மகுடாபிஷேகம் நடைபெறப் போகின்றதென்பதைப் பேருவகையுடன் பகர்ந்தாள். அது கேட்ட மந்தரை உடனே மனம் தளும்பி மிக்க பரபரப்புடன் கீழிறங்கிக் கைகேயியின் அந்தப்புரத்திற் சென்று அவளை நோக்கி "அடி மதிகெட்டவளே! உன் தலைமேல் இடிவிழுந்திருக்க இப்படியுமுறங்குவாயோ? உனக்குப் பலபல துன்பங்கள் நேரிடப் போகின்றனவென்பது தெரியவில்லையா? மன்னவன் உன்மீது காதல் கொண்டிருப்பவன்போல் நடிக்கின்றானேயல்லது உண்மையான காதலை உன்மீது வைத்திலன் காண்; அநியாயமாய் ஏமாந்து போகின்றாயே!" என்று கூக்குரலிட்டனள். செய்தி இன்னதென்றறியாத கைகேயி மந்தரையை நோக்கி 'யாது காரணம்பற்றி இங்ஙனம் நீ வருத்தமுற்றுப் பேசுகின்றனை? உனக்கு ஏதேனும் அனர்த்தம் நேர்ந்திருக்குமாயின் அதைச் சொல்' என்ன, அந்தக் கூனிக்கிழவி மிக்க கோபத்தையும் வருத்தத்தையும் காட்டிக்கொண்டு, "இராமனுக்கு முடிசூட்டப் பெரு முயற்சி நடந்து கொண்டிருக்கின்றதே! உன் மகனை பரதனுக்கு அரசுரிமையின்றி அஃது இராமனுக்கே ஆவதனால் விளையப்போகும் பெருங் கேட்டை நீ அறிகின்றிலையே!, இனி உன்னையும் உன் மகனையும் மதிப்பாரார்? கௌஸல்யைக்கேயன்றோ எல்லாவகையான மதிப்பும் மேன்மையும் இனி நிரம்பி நிற்கும்; மன்னவன் உன்மீது மிக்க அன்புள்ளவன் போலிருந்து அந்தோ! உன்னை வஞ்சித்துவிட்டதை ஐயோ! அறிவுகேடீ! அறியாமலிருக்கின்றாயே!; உன் மகனை பரதனைப் பகைவனாக நினைத்துத் தேசாந்தரத்திற்குத் துரத்திவிட்டுக் கௌஸல்யைமகனுக்கு நாளை யுதயத்தில் முடிசூட்ட முடிவு செய்திருக்கின்றானே! உனக்கு நேர்ந்த இப்பெருந்துயரத்தை நீ அறியாவிடினும் நானறிந்து வருந்துவதற்கு அளவில்லையே! ஐயோ! கெட்டுப்போயினை! கைகேயீ! பெருந்துயரத்திற்கு உள்ளாயினை; இதைப் பொறுத்திருக்க என்னால் முடியவில்லையே! விரைவில் நன்மை தேடிக்கொள்ளமாட்டாயோ? உனது மதியின் மேன்மையையும் வடிவழகின் சிறப்பையும் உபயோகப்படுத்தியே நீ உன்னையும் உன் புதல்வனையும் என்னையும் பாதுகாக்கவேணும்" என்றனள். கூனி இத்தனை கூறியும் சிறிதும் மனவருத்தமுறாத கைகேயி இராமனுக்கு மகுடாபிஷேகம் நடைபெறப் போகின்றதென்று நல்வார்த்தையைத் தெரிவித்த பேருதவிக்காக மிகமகிழ்ந்து உள்ளம் பூரித்து அவளுக்குப் பரிசாக உயர்ந்ததோர் ஆபரணத்தையெடுத்துக் கொடுத்து, "தாயே! மந்தரையே! என் செவியில் அமுதம் பாய்ச்சினாற் போன்ற நன்மொழியை வந்து நல்கினையே, உனக்கு நான்

இன்னமும் என்ன பரிசளிப்பேன் !; இராமனுக்கு முடி சூட்டுதல் என்கிற இம்மங்கல மொழியை இப்போது கேட்கப் பெற்றயான் அடையும் ஆனந்தத்திற்கு அளவில்லையே ! இராமன் என்றும் பரதன் என்றும் யான் ஒரு வாசி வைத்திருக்கவில்லையே ! நான் மன முகக்கும்படியான செய்திகளுள் ஸ்ரீராமாபிஷேக மென்கிற இதனிற் காட்டிலும் மேம்பட்டது வேறொன்றும் இருக்கமுடியாததுகாண் ; இத்தன்மைய மகிழ்ச்சிச் செய்தியை என்னிடம் தெரிவித்த நீ ஏது வேண்டுவாயாயினும் கொடுக்கக்கடவேன் " என்று கூறினள்.

### கைகேயி கொடுத்த பரிசைத் திரஸ்கரித்து மந்தரை ராமாபிஷேகத்தினால் விளையுங் கேட்டை விரிவாகக் கைகேயிக்கு எடுத்துரைத்தல்.

கைகேயி இங்ஙனம் ஆனந்தம் பொங்க நின்று கூறியதைக் கேட்ட கூனி வருத்தமும் சீற்றமும் வளரப் பெற்று, அவள் கொடுத்த ஆபரணத்தையும் வீசி யெறிந்து " அந்தோ ! அறிவு கெட்ட மூடமே ! மிக வருந்த வேண்டிய இச்சமயத்தில் மகிழ்ச்சி கொண்டிருக்கின்ற உன்றன் மூடத்தனத்தை என்ன சொல்லுவேன் !, இராமனுக்கு முடி சூட்டுவதிற் காட்டிலும் மேலான ஆபத்து உனக்கு வேறு என்ன இருக்கின்றது ? இத்தகைய பெரிய ஆபத்து சமீபித்திருந்தும் அதைத் தொலைக்க வழி தேடாது இப்படி விபரீதமாக ஸந்தோஷங்கொண்டிருக்கின்ற உன்னைப் பற்றி எவ்வளவுதான் நான் வருந்துவேன் !; உனது சக்களத்தியின் மகன் என்றைக்கும் உனக்குப் பகைவனே ; அவனுக்கு நன்மை நேருவது உனக்கு மிருத்யுவேயாகும் ; அப்படிப்பட்ட மிருத்யு வரக்கண்டும் மகிழ்வுற்றிருக்கின்ற நீ விவேகமுடையவளாவையோ ? உன் மகனை பரதனுக்கு இனி விளையப்போகும் கஷ்டங்களை நினைத்து நான் வருந்துகின்றேன் ; அன்றியும் உனது சக்களத்தியாகிய கௌஸல்யை தன் வயிற்றிற்பிறந்த ராமனுக்கு ராஜ்யாபிஷேகம் ஆய்விட்டால் உள்ளடங்காத சந்தோஷம் பெறுவள் ; தனக்குமேற்பட்ட பாக்யவதி ஒருத்தியுமில்லை யென்று மிக்க செருக்குக்கொள்வள் ; சக்களத்திகளைக் கீழ்ப்படுத்தித் தானே மேன்மையுற்று விளங்குவள் ; நீயும் அவளுக்கு இழிதொழில் செய்தே காலங்கழிக்கவேண்டியதாகும். உன் மகனுக்குக் கெடுதல் விளையப்போகிறதென்னும் விஷயம் அப்படியிருக்கட்டும் ; உனக்கேயன்றோ பெருங்கேடு விளையப்போகிறது ; நீயும் உனது வேலைக்காரியாகிய நானும் மற்றும் பலரும் கௌஸல்யையிடம் கைகட்டிக் காத்திருந்து அடிமைசெய்து பிழைக்கும் பிழைப்பு ஒரு பிழைப்பாகுமோ ? உன் மகனும் ராமனுக்கு ஏவலாளனாயிருந்து வாழவேண்டியவனாவான்." என்றும் மற்றும் பலவும் கூறினள். கூனி இவ்வளவு கூறியும் கைகேயி சிறிதும் மன வேறுபாடுறாமல் இராமனது திருக்குணங்களையே பாராட்டிக் கூறத்தொடங்கினள். " மந்தரையே ! இராமனே ஸகலகுணங்களும் நிரம்பப்பெற்றவனாதலாலும் மூத்த குமாரனாதலாலும் அவனே அரசாள்வதற்கு உரிமையுடையவன் ; இளையோனாகிய பரதனுக்கு அவ்வுரிமை உரியதன்று ; இராமனால் பரதனுக்கு ஏதேனும் கெடுதல்விளையுமென்று நீ சங்கித்தலும் தகுதியற்றது. இராமனது திருக்குணங்களைச் சிறிதுமறியாது கூறுகின்றாய் போலும். இராமன் தம்பிகளையும் வேலைக்காரர்களையும் தந்தையைப்போல் மிக்க அன்புடன் பாதுகாத்து வருவான்: அவ்விராமன் செல்வமனைத்தும் மல்கி நீடூழிவாழவேணும். அவனுக்கு நடைபெறவிருக்கும் மகுடாபிஷேகத்திற்கு மனமகிழவேண்டியிருக்க நீ இங்ஙனம் பரிதபிப்பது மிகவும் பிசகு ; இராமன் நூறாண்டு அரசாண்டபின் வமிச பரம்பரைப்படி பரதனும் அரசாள்வான் ; இப்பொழுது இராமனுக்கு முடிசூட்டுவதே மிகவும் நியாயமானது. இராமன் என்னையும் கௌஸல்யைக்கு மேலாகவே பாராட்டு மியல்பினனாதலால் எனக்கும் ஒரு கெடுதல் விளையாது ; இராமன் ஆள்வதோடு பரதன் ஆள்வ

தோடு ஒருவாசியில்லை" என்றனள். கைகேயி இங்ஙனம் கூறியவற்றைக்கேட்ட கூனி மிகத்துயரமடைந்து பெருமூச்செறிந்து மீண்டும் கைகேயியை நோக்கி "அடி முழு மூடமே! நன்மை தீமைகளை நீயாகவே தெரிந்துகொள்ள வேண்டியிருக்க, நான் விளங்க எடுத்துரைத்தும் அந்தோ! இறையும் அறியாதிருக்கின்றனையே; உன்மகன் நாட்டை விட்டுக் காட்டுக்குப் போகவேண்டும்படியான கெட்டகாலமன்றே குறுகுகின்றது; நீயும் மதிப்பிழந்து சக்களத்திக்கு ஊழியம் செய்யவேண்டும்படியன்றே நேரிடப்போகிறது; ஒன்றுமறிகின்றிலையே! 'இராமனுக்குப் பின்பு பரதனுக்கு அரசுரிமை கிடைக்கவே போகின்றது' என்று கூறுகின்ற உன்னுடைய அறிவீனத்தை நான் என்னவென்று சொல்லுவேன்? இராமன் வயிற்றிற் பிறக்கும் புதல்வனேயன்றே இராமனுக்குப்பிறகு அரசுபெறுவான்; பரதனும் அவன் மகனும் அரசாள்வதற்கு எக்காலத்திலும் ஏதுவில்லாமற் போகுமென்பதை யறிந்திலையே! ராஜவம்சத்தில் பரதனுடைய பெயரே இல்லையாய்விடப் போகின்றதே! 'இராமன் மூத்தவனாயிருக்க இளையோனாகிய பரதனுக்கு அரசாட்சிச்செல்வம் வருவதற்கு வழியில்லையே!' என்று நீ நினைக்கக்கூடும்; பரதனுக்கு ராஜ்யம் கைசோராதபடி உனக்கு உபாய முணர்த்தவே நான் இங்குவந்திருக்கின்றேன். இது நிற்க, பெரிய ஆபத்துவந்துவிட்டதென்பதையு மறியாமல் எனக்கு நீ பரிசு அளிக்க வந்தாயே, இதை நினைக்க எனக்கு ஆறவில்லை. இதுவும் நிற்க: பரதனை இளமையிலேயே தேசாந்தரத்திற்கு அனுப்பிவிட்டாய்; இவ்விடத்திலேயே அவன் இருந்திருப்பானாயின் இராமனுக்கும் தசரதனுக்கும் அவன் மீது எவ்வளவோ அன்பு உண்டாகியே யிருக்கும். அங்ஙனம் அன்பு விளையக்கூடிய சேர்த்தியை நீயே கெடுத்துவிட்டாய்; அப்பரதனுக்கு உயிர்போன்றவனான சத்ருக்னனாவது இங்கு இருந்திருப்பானாயின் அவனிடத்திலுள்ள அன்பு காரணமாகப் பரதனிடத்திலும் அன்பு ஒருவாறு பெருகக்கூடும்; சத்ருக்கனனும் பரதனோடுகூட அனுப்பப்பட்டு விட்டான். இராமனும் இலக்குமணனும் தம்முள்தாம் அளவுகடந்த அன்பு பூண்டிருக்கின்றனர். அவர்களுக்குள் ஒருபோதும் மாச்சரியம் ஏற்படாது. இராமன் பரதனுக்கு அவசியம் கெடுதி செய்தே தீருவன்; இதில் சிறிதும் ஐயமில்லை. இராமன் முடிசூடப்பெற்றபிறகு பரதன் கேகய நாட்டில் நின்றும் இங்குவந்து இராமனால் கொலையுண்டு முடிவதிற்காட்டிலும் அவன் இங்கு வாராமலே எங்கேனும் காட்டிற்சென்று வாழலாம். அங்ஙனன்றி அவன் சீரும் சிறப்புமாக வாழவேண்டில் அவனே முடிசூடப் பெறும்படி நீ முயலவேண்டும். இராமன் பூமிக்கு அரசனாயிடின் அப்பொழுதே பரதன் பாழாய்ப்போவது நிச்சயம். ஆகவே உன்மகன் மகுடம்சூடும்படிக்கும் இராமன் காட்டிலே துரத்தப்படுவதற்கும் தகுந்த உபாயத்தை இப்பொழுதே ஆலோசித்துக் கொள்வாயாக" என்றாள்.

மந்தரை தன் சொல்லுக்கு உடன்பட்ட கைகேயிக்கு, ஏற்கெனவே தசரதன் வாக்களித்திருக்கின்ற இரண்டு வரங்களை இப்போது வேண்டிக்கொள்ளும்படி தெரிவித்தலும், கைகேயி அதற்கு உடன்பட்டுக் கோபக்ருஹத்திற்கிடத்தலும்.

கூனி கூறியதை யெல்லாம் கேட்ட கைகேயி 'சக்களத்திக்கு அடிமைப்படவேண்டும்படியா எனக்கு நேரிடப்போகிறது!, நானா அடிமைப்படுவேன்!' என்று பெருமூச்செறிந்து கூறிக்கொண்டு கோபமும் தாபமும் மிகப்பெற்று 'மந்தரையே!, உடனே இராமன் நாடுதுறந்து காட்டுக்குச் செல்லவும் பரதன் முடிசூடப்பெறவும் என்ன வுபாயமென்பதைச் சிந்தித்துச் சொல்லக்கடவை' என்றாள். மந்தரை அதுகேட்டுப் பரம ஸந்தோஷத்தை வெளியிட்டு "அம்மா கைகேயீ! அந்த உபாயம் உனக்கே தெரிந்திருந்தும் என் வாயாற்கேட்க விரும்புகின்றனையோ பாலும்; சொல்லுகிறேன் கேளாய்; முன்பு தேவாசுரயுத்தத்தில் தேவேந்